

# CHANDAMAMA

PRESENTS

# "BE A DREAM CHILD" CONTEST

The President of India, Dr. A.P.J.Abdul Kalam, in the course of his interaction with children, has been exhorting them to DREAM for the future of India and its people. Recently, at the end of his address to the nation on January 25, he administered an oath to a group of children. For the sake of our young readers, the 10-point oath is reproduced below.

1. I will pursue my education or work with dedication and I will excel in it.
2. I will teach at least 10 illiterate persons to read and write.
3. I will plant at least 10 saplings and shall ensure their growth through constant care.
4. I will visit rural and urban areas, and permanently wean away at least five persons from addiction and gambling.
5. I will constantly endeavour to remove the pain of my suffering brethren.
6. I will not support any religious, caste or language differentiation.
7. I will be honest and will endeavour to make a corruption free society.
8. I will work for becoming an enlightened citizen, and make my family righteous.
9. I will always be a friend of the mentally and physically challenged and will work hard to make them feel normal, like the rest of us.
10. I will proudly celebrate the success of my country and my people.

Chandamama invites the children of India to write one para each about what they have achieved **in fulfilling the ten points by the next Independence Day.** The contest is open to children between 8 and 15.

**ENTER THE CONTEST AND WIN ATTRACTIVE PRIZES!**

**THREE BEST ENTRIES WILL BE PUBLISHED IN OUR NOVEMBER 2004 ISSUE.**

**CLOSING DATE : August 31 2004**

Watch for instructions and details of prizes in the April 2004 issue

# அப்துல்லாவும், தாராமதி பாராதரியும்



பதினேழாம் நூற்றாண்டில், அப்துல்லா என்ற சுல்தான் இருந்தார். இவர் குதுப்ஷாஹி வம்சத்தில், கோல்கொண்டாவை ஆண்ட ஏழாவது சுல்தான் ஆவார்.

தன் தந்தை இறந்தவுடன் தனது இளம் பருவத்தில் பன்னிரண்டாவது வயதிலேயே சுல்தானாக பதவியேற்றார். இவர் புகழ்பெற்ற கோல்கொண்டா கோட்டையில் வசித்து வந்தார். இந்தக் கோட்டை, பல கற்சுவர்களால் கட்டப் பட்ட பல அரண்மனைகளை தன்னுள்ளே கொண்டது. இந்தக் கோட்டையின் ஒலி அமைப்பு அபூர்வமானது. இங்கு எங்காவது ஒலி எழுப்பினால், அது கோட்டை அறைகளிலும், கற்சுவர்களிலும் பட்டு பிரதிபலித்து எதிரொலி களாக கேட்கும்.

கலை, கவிதை, இசை ஆகியவற்றில் மிகவும் ஆர்வம் கொண்ட அப்துல்லா ஒரு நல்ல இரக்க குணமுள்ள நபராக இருந்தார். கவிதைகள் இயற்றுவதில் இவருக்கு மிகவும் விருப்பம் உண்டு. இவர் சுமார் எண்பது கவிதைகளை இயற்றியுள்ளார்.

அவரது ஆட்சி காலத்தில், மிக நன்றாகப் பாடக்கூடிய ஒரு அழகான பெண் இருந்தாள். அவள் ஓர் இந்துப் பெண்மணி. அவள் பெயர் தாராமதி. அவள் பாடும் பாடல்கள் மீது அப்துல்லாவுக்கு மிகவும் விருப்பம் உண்டு.

கோல்கொண்டாக் கோட்டை பசுமையான செடி, கொடி, மரங்களாலும், மலைகளாலும் சூழப்பட்டு இருந்தது. இந்தக் கோட்டையே ஒரு குன்றின்மீது உருவாக்கப்பட்டதுதான். இந்தக் கோட்டைக்கு எதிரில், ஒரு குன்றின்மேல் பன்னிரண்டு வாயில்களுடன் கூடிய ஓர் அழகிய அரங்கத்தை அப்துல்லா உருவாக்கினார். பன்னிரண்டு வாயில்கள் கொண்டதால், அதற்கு பாராதரி என்று பெயரிடப்பட்டது.

சுல்தான் தாராமதிக்கு பாராதரியை சொந்தமாகக் கொடுத்து, அவள் அங்கு அமர்ந்து பாடுமாறு செய்தார். பல வாயில்கள் இருந்ததால் பாராதரி காற்றோட்டமாகவும் குளிர்ச்சியாகவும் இருந்தது. அது மட்டுமல்ல, தாராமதி பாடும் இன்னிசை காற்றினில் தவழ்ந்து எதிரில் உள்ள சுல்தானின் கோட்டைக்குள் சென்று, சுல்தானின் செவிகளில் அமுதெனப் பாய்ந்து வந்தது. தாராமதி பாடுவதற்கென்றே, சுல்தான் சிறப்புக் கவிதைகள் இயற்ற, தாராமதியும் தன் மயக்கும் குரலில் அவற்றை இனிமையாகப் பாடி வந்தாள். அந்த நினைவுச்சின்னத்திற்கு தாராமதி பாராதரி எனப் பெயரிடப்பட்டது.

கோல்கொண்டாக் கோட்டை ஆந்திர மாநிலத் தலைநகரான ஐதராபாதின்







# தாராமதி பாராதரி

## இசை, நடனக் கலையரங்கம்

எல்லையிலே உள்ளது. ஆந்திர மாநிலத்தில் உள்ள சுற்றுலாப் பயண இடங்களில், கோல்கொண்டாக் கோட்டை முக்கியமான ஒன்றாகும். இந்தக் கோட்டையில் சிறப்பான ஒலி ஒளி அமைப்பு ஏற்படுத்தப்பட்டு அங்கேப் பயணிகளுக்கு இந்தக் கோட்டையின் விவரங்கள் விளக்கப் படுகின்றன.

தாராமதி பாராதரி நினைவுச் சின்னம், செப்பனிடப்பட்டு, பாதைகள் சீராக்கப்பட்டு, ஏராளமான விளக்குகள் பொருத்தப்பட்டு, இப்போது மிக அழகாக விளங்குகிறது.

அந்த இடத்தைச் சுற்றிலும் பச்சை பசேலென்ற புல்வெளிகள் உருவாக்கப்பட்டு ஒரு திறந்த வெளியரங்கும், ஒரு உள்ளரங்கும் இசை, நடன நிகழ்ச்சிகள் நடத்துவதற்காக ஏற்படுத்தப் பட்டுள்ளன. இதைத் தவிர தங்குவதற்கும், உண்பதற்கும் தேவையான ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன.

400 ஆண்டுகளுக்கு முன்னர் சுல்தான் தாராமதியின் இசையைக் கேட்டு எவ்வாறு மகிழ்ந்து பாராட்டினாரோ, அதேபோன்று இன்றும் தாராமதி பாராதரிக்கு விஜயம் செய்யும் சுற்றுலாப் பயணிகள் அதைக் கண்டு, ''வாஹ்! வாஹ்!'' என்று மகிழ்ந்து பாராட்டுவார்கள். அடுத்தமுறை நீங்கள் ஐதராபாத் சென்றால், **தாராமதி பாராதரியைக்** காணத் தவறாதீர்கள்.



Newly created facilities around Taramati Baradari

அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 மார்ச் : 2004 புன்னகை : 1



மாய மந்திரவாதி

9



நவீன வேதாளக் கதை

15



இந்தியப் புராதனக் கதைகள்

22



விஷ்ணு புராணம்

61

## பொருளடக்கம்



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

***Remittances in favour of Chandmama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.120/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா** லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# மானிட உயிருக்கு மதிப்பு குறைவு!

இரு இளைஞர்கள் வட இந்தியாவில் ஓடும் ரயிலிலிருந்து வெளியே தள்ளப்படவே அவர்களில் ஒருவர் இறந்து விட்டார் என்ற பயங்கரச் செய்தியை அறிந்து நாடே கதிகலங்கியது. அவர்கள் தாம் பயணம் செய்த ரயிலில் இளம் பெண்களை ஒரு சில போக்கிரிகள் அவமானப் படுத்த முயன்றதைக் கண்டு அதைத் தடுக்கச் சென்றவர்கள் அப்பெட்டியிலிருந்துதூக்கி வெளியே எறியப் பட்டனர். அந்த இளம்பெண்கள் அடுத்த ரயில் நிலயத்தில் இறங்கவே அப்போதும் அந்தப் போக்கிரிகள் அவர்களை விட்டு வைக்கவில்லை.

இது குடியரசு தினத்திற்கு இரண்டு நாட்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி. 54 ஆண்டுகளுக்கு முன் நம் அரசியல் சட்டம் நடைமுறைக்கு வந்தது. இது நமக்கு வாழ்க்கையில் சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் அளித்துள்ளது. இதனால் பெருமை கொள்ள வேண்டிய நாமே அந்த ரயில் சம்பவத்தால் தலை குனிந்து கொள்ள வேண்டி இருக்கிறது.

நாம் இப்போது பல துறைகளில் முன்னேறி இருந்தாலும் நம் முன்னோர்களும் ஞானிகளும் அறிவுறுத்திய மனிதப் பண்புகளை மறந்து விட்டோமா? மரம், செடிகளையும் மிருகங்களையும் அழிக்காமல் பாதுகாக்க முயலும் நாம் மானிட உயிர்களை ஏன் குறைவாக மதிப்பிட வேண்டும்?

ரயிலில் ஒருசில போக்கிரிகளின் அக்கிரமங்களைக் கண்டும் எதுவும் பேசாதிருந்த வயது வந்தவர்களை என்னென்பது? இரண்டு இளைஞர் தாம் அதைக் கண்டிக்கப் போய் அதற்கான விலையைக் கொடுத்தார்கள். மானிட உயிர் இவ்வளவு மலிவாகி விட்டது மிகமிக வருந்தத் தக்கதாம்.

*Editor :* VISWAM





**Statement about Ownership of**
**CHANDAMAMA ( Tamil)**
Rule 8 (FormVI), Newspaper (Central) Rules, 1956

1. Place of Publication
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
2. Periodicity of Publication
   MONTHLY
   1st of each calendar month
3. Printer's Name
   B. VISWANATHA REDDI

   Nationality
   INDIAN

   Address
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
4. Publisher's Name
   B. VISWANATHA REDDI

   Nationality
   INDIAN

   Address
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
5. Editor's Name
   B. VISWANATHA REDDI (Viswam)

   Nationality
   INDIAN

   Address
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097
6. Name and Address of individuals who own the paper
   Chandamama India Ltd.

   Board of Directors:
   1. P. Sudhir Rao
   2. Vinod Sethi
   3. B. Viswanatha Reddi
   82 Defence Officers Colony
   Ekkatuthangal, Chennai-600 097

*I,* **B. Viswanatha Reddi,** *do hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

(Sd.) B.VISWANATHA REDDI
*Publisher*

1st March 2004

# A TREASURE-TROVE FOR TALENTED TOTS







**Junior**
**CHANDAMAMA**

**THE ONE-STOP COMPLETE FUN AND ACTIVITY MAGAZINE.**

*Mail the form below along with the remittance to :* Subscription division, Chandamama India Limited, 82 Defence Officers' Colony, Ekkatuthangal, Chennai - 600 097.

## SUBSCRIPTION FORM

Please enrol me as a subscriber of Junior Chandamama.
I give below the required particulars:

Name :
..........................................................................................
Address :
..........................................................................................
..........................................................................................
................................ PIN Code : ................................

I am remitting the amount of Rs.120/- for 12 issues by Money Order/Demand Draft/Cheque No........................................ on.................................... Bank .................................... branch drawn in favour of Chandamama India Ltd., encashable at Chennai (outstation cheque to include Rs.25/- towards Bank Commission).

Signature

Place : ....................
Date : ....................



# மாய மந்திரவாதி

## 4

*(நீர் வீழ்ச்சியின் பக்கத்திலிருந்து வந்த மாயமந்திரவாதி காளிவர்மனின் வீரத்தைப் பாராட்டினான். அச்சமயம் ஜிதகேது மன்னனின் அமைச்சன் வீரர்களுடன் வரவே அவனை மந்திரவாதி கதி கலங்க வைத்துத் தலையாரியின் எருமைக்கடாவின் மீது ஏற்றி எல்லோருடனும் தலைநகருக்குப் போகும்படிக் கட்டளை இட்டான். அது கண்டு கோபம் கொண்டு காளிவர்மன் மந்திரவாதியைத் தாக்க வாளை உருவி எடுத்தான். அதன் பிறகு)*

அதைக் கண்ட மந்திரவாதி ஒரு கணம் திகைத்துப் போனான். பிறகு சுற்றிலும் பார்த்தான். அங்கிருந்தவர்கள் யாவரும் பயந்து நடுநடுங்கிக் கொண்டிருந்தார்கள். அமைச்சன் ஜீவகுப்தன் தான் ஏறி அமர்ந்திருந்த எருமையை காளிவர்மனின் பக்கம் ஓட்டினான். ஆனால் மந்திரவாதி அவனைத் தடுத்து ''ஏய் குப்தா! நீ என்ன செய்யப் போகிறாய்? காளிவர்மன் என்னைத் தாக்கச் செய்யவா முயல்கிறாய்? என்று கேட்டான்.

ஜீவகுப்தன் நடுநடுங்கும் குரலில் ''ஐயா! அதெல்லாம் இல்லை. உங்கள் கட்டளைப்படி நடக்க வேண்டும் என்று இந்த இளைஞனுக்கு அறிவுறுத்தவே முயல்கிறேன்'' என்றான் அதைக் கேட்ட மந்திரவாதி பலமாகச் சிரித்து ''நீ



இந்தக் காளிவர்மனின் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டிய நிலை ஏற்படப் போகிறது. எனவே எச்சரிக்கையாக இரு'' என்றான். அதன் பின் அவன் காளிவர்மனைப் பார்த்து ''வர்மா! அவசரப்படாதே. நீ வாழ்க்கையில் அடிபட்டவனல்ல. இப்போது நீ உன் ஊருக்குப் போனால் என்ன நடக்கும் தெரியுமா'' என்று கேட்டான்.

காளிவர்மனும் ''என்ன நடந்தாலும் என்னால் எதிர்த்துப் போரிட முடியும். என்னை யாரால் என்ன செய்து விடமுடியும்?'' என்று கேட்டான். அதைக் கேட்ட மந்திரவாதி பலமாகச் சிரித்து ''இதோ நிற்கிறானே குள்ள நரி ஜீவகுப்தன்! இவன் உன்னைக் கைது செய்து சிறையில் அடைத்து விடுவான். அது இவன் உன்னைப் பார்க்கும் பார்வையிலேயே தெரிகிறது. ஏய் குப்தா! நான் சொன்னது உண்மைதானே! மறைக்காமல் சொல். பொய் சொன்னால் உன்னை என்ன செய்வேன் தெரியுமா?'' என்று கூறிக் கண்களை உருட்டிப் பார்த்தான்.

ஜீவகுப்தனும் பயந்தவாறே ''எப்படி நான் எண்ணியதை நீங்கள் அறிந்து கொண்டீர்கள்?'' என்று கேட்டான். அப்போது மந்திரவாதி ''வர்மா! இவன் கூறியதைக் கேட்டாயா? இவனால் உனக்கு ஆபத்து வரும் என்று தெரிந்ததா? உனக்கு இனி சந்திரசீல நாட்டில் இடம் இல்லை. படை பலம் கொண்ட ஜிதகேது மன்னனை நீ தனியாக நின்று எதிர்க்க முடியுமா? யோசித்துப் பார்'' என்றான்.

அப்போதுதான் காளிவர்மனுக்குத் தன் நிலை புரிந்தது. மன்னனை எதிர்க்க முடியாமல் நாட்டைவிட்டு வெளியேறத் தானே வேண்டும். இதை எண்ணிப் பார்த்து அவன் உருவிய வாளை உறைக்குள் போட்டவாறே மந்திரவாதியிடம் ''இனி நீங்கள் என் குரு. நீங்கள் கூறியது உண்மையே. என் பாதுகாப்பைப் பற்றி என்னைவிட நீங்கள் தாம் அதிகக் கவலைப் படுகிறீர்கள். நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்'' என்று கேட்டான்.

மாயமந்திரவாதி தன் கைத் தடியால் அவன் தோளில் தட்டி ''பேஷ் வர்மா! நீ என்னை குருவாக ஏற்றுக் கொண்டது எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது. இப்போது நாம் எல்லோருமே தலைநகருக்குப்

போவோம். அந்த ஜிதகேது மன்னன் எப்படிப்பட்டவன் என்று பார்ப் போம். ஜீவகுப்தா! நீ எருமைக் கடாவின் மீதிருந்து கீழே இறங்கு. நான் அதன் மீது ஏறி உட்கார்கிறேன். நீ அதன் முன் நடந்து செல்'' என்று கூறினான்.

ஜீவகுப்தனும் மாயமந்திரவாதி கூறியபடியே செய்தான். அப்போது மந்திரவாதி ''இந்த எருமைக்கடா எமலோகத்திலிருந்து வந்தது. இப்போது இதற்கு இதனுடைய அபூர்வ சக்திகள் இல்லை. ஆனால் வேகமாகக் குதிரைபோல ஓடக் கூடியது. இதை ஓட வைக்கிறேன். ஜீவகுப்தா! இதற்கு ஈடு கொடுத்து நீ ஓட வேண்டும்'' என்றான். பிறகு அவன் அதனை வேகமாக ஓடச் செய்யவே ஜீவகுப்தனும் தட்டுத் தடுமாறி விழுந்து எழுந்து அதன் பக்கமாக ஓடலானான்.

சற்று தூரம் போனதும் மந்திரவாதி எருமைக் கடாவை நிறுத்தவே ஜீவ குப்தனும் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க ஓடி நின்றான். அப்போது மந்திரவாதி ''ஒரு அமைச்சர் எருமைக் கடாவுடன் போட்டி போட்டுக் கொண்டு ஓடியதை இதற்கு முன் நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்களே'' என்று தன்னோடு வந்தவர்களைப் பார்த்துக் கேட்டான். அவர்கள் பலமாகச் சிரிக்கவே ஜீவ குப்தன் அவமானத்தால் தலை குனிந்து கொண்டான்.

அப்போது காளிவர்மன் மந்திர வாதியிடம் ''நாம் இப்போது



ஜிதகேது மன்னனைப் பார்க்கும் நோக்கம் என்ன குருவே? அவனை தண்டிக்கப் போகிறீர்களா?'' என்று கேட்டான். மாயமந்திரவாதியும் ''இந்த மன்னனைப் பற்றித் தான் நன்கு அறிவேனே. நீ இவனுக்கு பதிலாக அரியாசனத்தில் அமர ஆசைப்படுகிறாயா?'' என்று கேட்டான்.

காளிவர்மனும் ''குருவே! என் மனதில் அப்படிப்பட்ட ஆசை எல்லாம் இல்லை. நான் விரும்புவது எல்லாம் நிரபராதிகள் தண்டிக்கப் படாமல் இருக்க வேண்டும் என்பது தான்'' என்றான். மாய மந்திரவாதியும் ''ஆம். இதற்கு முயன்று பார்க்கலாம். அரசவம் சத்தில் பிறந்து அரசனாகிறவர்கள் பிறர் சொல்வதை எளிதில் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அப்படித் தானே ஜீவகுப்தா?'' என்று



வீர்கள்'' என்றான். அப்போது அவர்களில் ஒரு வீரன் ''நாங்கள் யார் தெரியுமா? உதயகிரி மன்னரான துன்முகனின் வீரர்கள். அந்தக் காளிவர்மனை ஜிதகேது மன்னன் எங்கள் மன்னரிடம் ஒப்படைக் காததால் எம்மன்னர் இந்நாட்டின் மீது படை எடுத்து வரப்போகிறார். தெரிந்ததா?'' என்று கூறினான். மந்திரவாதியோ'' இதை ஏன் எங்களிடம் கூறுகிறாய்? யாரிடத்தில் சொல்ல வேண்டுமோ அவரிடம் போய்ச் சொல். இப்போது எங்களுக்கு வழியை விட்டு விலகி நில்'' என்றான்.

கேட்டான் ஜீவகுப்தனும் ''ஐயா சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை'' என்று தாளம் போட்டான்.

அதன்பின் அவர்கள் தலை நகரை நோக்கிப் போய்க் கொண்டிருந் தார்கள். அப்போது இரு குதிரை வீரர்கள் அவர்கள் எதிரே வந்து குறுக்கே நின்று ''எருமைக்கடா மீது ஒரு சன்னியாசி. பட்டாடை அணிந்த ஒருவன் நடக்க, பிசாசு போல ஒருவன் குதிரை மீதா? யார் நீங்கள்?'' என்று அதிகாரத்துடன் கேட்டார்கள். மந்திர வாதி உரக்கச் சிரித்து அவர்களிடம் ''ஓஹோ! உங்களைப் பார்த்தால் ஜிதகேது மன்னனின் வீரர்கள் அல்ல என்று தெரிகிறது. அதனால் தான் எங்களை யாரென்று நீங்கள் தெரிந்து கொள்ளவில்லை. வேண்டுமானால் எங்களுடன் தலைநகருக்கு வாருங் கள். அப்போது நாங்கள் யார் என்பதை நீங்கள் தெரிந்து கொள்

அப்போது மற்றவீரன் கருப்பு உடை அணிந்த தலையாரியைப் பார்த்து விட்டு ''நீ இந்நாட்டு குற்றவாளிகளின் மரண தண்ட னையை நிறைவேற்றும் தலையாரி தானே'' என்று கேலியாகச் சிரித்து கொண்டே கேட்டான். தலை யாரியோ அதைக் கேட்டு கோபத் தோடு ''அடே! என்னை கேலியா செய்கிறாய்? உன்னை என்ன செய்கிறேன் பார்'' என்று கூறித் தன் கோடாலியைத் தூக்கிக் கொண்டான்.

அதைக் கேட்டதும் காளிவர்மன் உற்சாகத்துடன் தலையாரியின் பக்கம் ஓடி வந்தான். அவன் தலையாரியைப் பாராட்டி ''அடி உதவுவது போல அண்ணன் தம்பி கூட உதவமாட்டான் உம். உன் திறனைக் காட்டி இந்த இரு வீரர்களின் தலைகளை வெட்டித் தூக்கி எறி'' என்றான். தலையாரியும்

''மந்திரவாதியார் அனுமதித்தால் அதனை ஒரு நொடியில் செய்து முடிக்கிறேன்'' என்றான். மந்திர வாதியும் ''வர்மா! இந்தப் பயல்கள் கேலி செய்து சிரிப்பதை இன்னமும் பொறுத்துக் கொண்டா இருப்பது? கொஞ்சம் இவர்களை கவனி'' என்றான்.

காளிவர்மன் தன் வாளை உருவி எடுத்துக் கொண்டு ''அடே மரியாதை யாக வழியை விட்டு விலகிப் போகப் போகிறீர்களா அல்லது என் வாளால் உங்கள் தலைகளைச் சீவி எறி யட்டுமா?'' என்று உறுமினான். அப்போது ஜீவகுப்தனோடு வந்த இரு குதிரை வீரர்கள் துன்முகனின் வீரர்களைத் தாம் தாக்குவதாகக் கூறிக் கொண்டு பாய்ந்தார்கள். வந்த இரு வீரர்களும் பயந்து பின் வாங்கிய வாறே ''எங்கள் மன்னர் தம் படை களுடன் சற்றுத் தொலைவில் தான் கூடாரங்கள் அமைத்துத் தங்கி இருக்கிறார். அவர்கள் இன்னும் சற்று நேரத்தில் வந்து உங்களை எல்லாம் தாக்கிக் கண்ட துண்டமாக்கப் போகிறார்'' என்று கத்தியவாறே ஓடினார்கள்.

சற்று நேரத்திற்குப் பின் ஜீவ குப்தனோடு வந்த குதிரை வீரர்களில் ஒருவன் ''அதோ பாருங்கள்! பத்து பன்னிரண்டு வீரர்கள் நம்மைத் தாக்க வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்று எச்சரித்தான். யாவரும் அவன் காட்டிய திக்கில் பார்த்தார்கள். ஆம் துன்முகனின் வீரர்கள் தாம் வேகமாக வந்து கொண்டிருந்தார்கள். ஆனால்



வந்தவர்கள் யாரையும் தாக்காமல் சற்றுத் தள்ளியே நின்று விட்டார்கள்.

அவர்களில் ஒருவன் ஒரு விகிதத்தை எடுத்து விரித்து உரக்கப் படிக்கலானான். ''இங்குள்ள எல் லோரும் சற்றுத் தொலைவிலுள்ள மாந்தோப்பினருகே முகாமிட்டுள்ள மன்னர் துன்முகர் முன் ஆஜராக வேண்டும் என்பது அரச கட்டளை.''

அதைக் கேட்ட காளிவர்மனும் மந்திரவாதியும் கோபத்தோடு அந்த வீரர்களைப் பார்த்தார்கள். ஜீவ குப்தனோ என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்து நின்ற கொண்டிருந்தான். அப்போது மந்திர வாதி ஜீவகுப்தனிடம் ''குப்தா! நம் எருமைக்கடாவை அதோ நிற்கும் வீரர்களைத் தாக்க ஏவிவிடு. அந்த துன்முகனின் கட்டளைக்கு இது தான் பதில் என்று அவர்கள் முதலில் போய் தம் மன்னனிடம் சொல்லட்டும்.

பிறகு நாம் போவோம்'' என்றான். அதைக் கேட்ட காளிவர்மன் ஆச்சரியத்துடன் ''நாம் அங்கே போவதா?'' என்று கேட்டான். ஆம் எனக் கூறி மந்திரவாதி எல்லோருடனும் மாந்தோப்பின் பக்கம் முகாமிட்டிருந்த துன்முகனைக் காணச் சென்றான்.

அவர்களைக் கண்ட துன்முகன் கோபத்தோடு ''உங்களில் யார் காளிவர்மன்? முதலில் அவன் தலையை வெட்டி விட்டு பிறகு மற்றவர்களின் தலைகளை வெட்டி எறிகிறேன்'' என்று கத்தினான்.

காளிவர்மனும் ''நான் தான் காளிவர்மன். என்னை என்ன செய்யப் போகிறாய்? என்னை சிறையில் அடைக்கப் போகிறாயா அல்லது என் தலையை வெட்டப் போகிறாயா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட துன்முகன் ''ஓஹோ! நீதான் அந்தக்காளிவர்மனா? உன்னைச் சிறையில் அடைக்க மாட்டேன். உன் தலையைத் தான் வெட்டி எறிய வேண்டும். அதைச் செய்து விட்டுதான் மறு வேலை பார்ப்பேன். நீ உன் மன்னனின் கட்டளைப் படித்தானே திருடர்களையும் கொள்ளைக்காரர்களையும் ஏவி விட்டு என் நாட்டில் கொள்ளை அடிக்கும்படிக் கூறினாய்? இது மாபெரும் குற்றம்.

அதற்காகத் தான் இந்தக் கடும் தண்டனை'' என்றான். மந்திரவாதியோ ''இவனை தண்டிக்க உனக்கு உரிமை கிடையாது'' என்றான். துன்முகனோ ''அப்படியா? இந்தக் காளிவர்மனின் தலையை நானே வெட்டி எறிவேன்'' என்றான்.

அதைக் கேட்ட மந்திரவாதி பெரிய கரடியப்பரே! என்று உரக்கச் சொல்லி ''இனி பார்க்கப் போகிறோம் யார் தலை வெட்டப் படப் போகிறது என்று'' என்று கூறியவாறே தன் கையிலிருந்த மந்திரத் தடியால் தலையாரியை ஒரு தட்டு தட்டினான் மறுநிமிடமே அவன் கருங்கரடியாக மாறி உறுமிக் கொண்டு துன்முகனை நோக்கிப் பாய்ந்தான்.



நவீன
வேதாளக்
கதை

# ஆனந்தனின் அமரகாவியம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்துக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, நீ இப்படி சிரமப்படுவது ஏன்? இந்த பயங்கர இரவில் இந்த முயற்சியை யாருக்காக மேற்கொண்டிருக்கிறாய்? நீ உதவுகிறாயே. அவன்இதைப் பெறத் தகுதி பெற்றவனா? இதை எல்லாம் யோசித்துப் பார்த்தாயா? இதை எல்லாம் ஏன் கேட்கிறேன் என்றால் நீயும் அரசகுமாரன் அனங்க பாலன்



ஆனந்தனுக்கு உதவியது போல யாருக்காவது வீணாக உதவுகிறாயோ என்னவோ? உனக்கு வழியில் சிரமம் தெரியாது இருக்க அந்தக் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கதையைச் சொல்லத் தொடங்கியது.

ஆலந்தூரிலிருந்த ஆனந்தன் என்பவன் தான் புகழ் பெற்றவனாகத் திகழ வேண்டும் என்று எண்ணினான். அவன் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன். ஆனாலும் உழைத்துச் சம்பாதித்து சிக்கனமாக இருந்து, வாழ ஒரு வீட்டை வாங்கி விட்டான். தன் மனைவிக்கும் நகைகள், பட்டுப் புடவைகள் என்று வாங்கியும் கொடுத்தான். ஒருவாறாக வாழ்க்கையில் நிலைத்து அவன் சுகமாக நாட்களைக் கழித்து வந்தான்.

கொஞ்சம் வசதி ஏற்பட்டதும் தான் புகழ் பெற ஏதாவது ஒரு அரிய செயலைச் செய்ய வேண்டும் என்று அவன் எண்ணினான். ஏனெனில் அப்போது வசதியாகப் பெரிய மனிதனைப் போல வாழ்ந்த போதும் அவன் தன்னை யாரும் புகழ வில்லையே என்று நினைத்ததே அதற்குக் காரணம். அவன் பலரிடம் தான் வாழ்ந்து வரும் உயரிய வாழ்வைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிப் பார்த்தான். ஆனால் அவன் கூறியதை யாரும் சட்டை செய்ய வில்லை.

அந்த ஊரில் புராண கதா காலட்சேபம் செய்யப் பரமேசுவரர் என்பவர் வந்தார். அவர் ஒரு மாத காலத்திற்கு ராமாயணப் பிரசங்கம் செய்தார். அவரை ஊரில் எல்லோரும் புகழ்ந்தார்கள் தினமும் அவரை யாராவது அழைத்துப் போய் விருந்தும் வைத்தார்கள். ஆனந்தனும் ஒரு நாள் தன் வீட்டிற்கு வந்து சாப்பிடும்படி அழைத்தான். அவரும் அவனது வீட்டிற்குச் சென்றார்.

சாப்பிட்டு முடித்ததும் அவன் பரமேசுவரரிடம் ''இராமாயணத்தில் ராமர் பல கஷ்டங்களைப் பட்டதாக நீங்கள் கூறி வருகிறீர்கள். ஆனால் ராமரின் கஷ்டங்கள் அவரது குடும்ப சம்மந்தப்பட்டவை தான். தன் தந்தை கொடுத்த வாக்கை காக்க வனவாசத்தை மேற்கொண்டார். தன் மனைவியை அபகரித்தான் என்பதற்காக அவர் ராவணனுடன் போர் புரிந்தார். இந்த மாதிரிப் பிரச்சினைகள் எல்லாக் குடும்பங்களிலும் தான் இருக்கின்றன. ஆனால் ராமரை

மகாபுருஷர் என்று வர்ணித்து வால்மீகி முனிவர் ராமாயணத்தை எழுதி உலகப் புகழ் பெற்றார். அதனால் எல்லோரும் ராமரைக் கடவுளாகக் கருதி வழிபடுகிறார்கள். எனவே சாதாரணமானவர்களைப் போற்றி ஏன் காவியங்கள் எழுதி ராமரைப் போல அவர்களையும் தெய்வப் பிறவிகளாக்கவில்லை?'' என்று கேட்டான்.

பரமேசுவரரும் ''நீ கேட்ட கேள்வி மிக முக்கியமானதே. ராமாயணத்தில் வரும் நிகழ்ச்சிகள் போல உலகில் எந்த நாட்டிலும் எந்தக் குடும்பத்திலும் நடைப் பெற்றே வருகின்றன. ராமர் அவதாரம் எடுத்தது நல்லவர்களைக் காக்கவும் கெடுதல் செய்பவர்களை அழிக்கவும் தான். அதனால் பகவானே ராமராக மானிட ஜென்மம் எடுத்து சாதாரண மனிதனைப் போலக் கஷ்ட நஷ்டங்களை அனுபவித்தார். எனவே அவரை அவதார புருஷர் என வால்மீகி முனிவர் எழுதினார். ராமரின் சரிதத்தை வால்மீகி எழுதியது போல வேறு யாரும் ஒருவரைப் பற்றி எழுதியதாக எனக்குத் தெரியவில்லை. அதனால் தான் ராமரை எல்லோரும் தெய்வமாகக் கருதுகிறார்கள்'' என்றார்.

அப்போது அவன் ''ஐயா! நான் என் கதையைக் கூறுகிறேன். அதை ராமாயணம் போல நீங்கள் எழுதிக் கொடுங்கள். என்னை எல்லோரும் நினைத்துக் கொண்டே இருப்பார்கள். உங்களுக்கும் வால்மீகியைப் போலப் பேர் கிடைக்கும்'' என்றான்.



பரமேசுவரரும் ''சரி, உன் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கூறு. அவை ராமருடையவை போல உள்ளனவா என்று பார்க்கலாம்'' என்றார். அவனும் தன்னைப் பற்றிக் கூறவே அவரும்'' நீயே உன் கதையை வால்மீகி முனிவர் எழுதியது போல எழுதி எல்லோருக்கும் சொல்லலாமே. உன் திறமை வால்மீகி முனிவரது போலவே உன்னுள் மறைந்துள்ளது'' என்றார்.

அதன் பின் அவன் தன் வரலாற்றைச் செய்யுள் வடிவில் எழுதி அதைத் தன் மனைவிக்குப் படித்துக் காட்டி ''எப்படி இருக்கிறது நான் எழுதிய காவியம்?'' என்று கேட்டாள். அவளும் ''ராமாயணத்தை எவ்வளவு தடவை நீ கேட்டாலும் சலிப்பு அடைவது இல்லையே. அது போல இதை கேட்டால் சலிப்பு அடைவது ஏனா?'' அது இனிமை



சற்று தூரம் போனதுமே ஒரு மரத்தடியில் ஒரு இளைஞன் நினைவு இழந்து விழுந்து கிடப்பதைக் கண்டான். அவனைத் தூக்கி ஒரு வண்டியில் போட்டு ஆனந்தன் தன் ஊருக்குக் கொண்டு போய் ஒரு வைத்தியரிடம் காட்டினான். அவரும் அந்த இளைஞன் ஏதோ ஒரு விஷக் கனியைச் சாப்பிட்டிருக்க வேண்டும் என்று கூறி மூன்று நாட்கள் சிகிச்சை அளித்தார்.

நான்காவது நாள் அவன் தன் நினைவு பெற்று எழுந்து உட்கார்ந்தான். தன்னைக் காப்பாற்றியன் ஆனந்தன் என்று அறிந்த அந்த இளைஞன் அவனுக்கு நன்றி செலுத்தினான். அப்போது ஆனந்தன் ''நன்றி செலுத்தியது சரி. நான் என் சரிதையைக் காவியமாக எழுதி இருக்கிறேன். அதைப் படிக்கிறேன் கேட்டு எவ்வளவு நன்றாக இருக்கிறது என்று கூறு'' எனக் கூறித்தான் எழுதி வைத்துள்ளதைப் படிக்கலானான். இளைஞனும் அதைக் கேட்கலானான். ஆனால் வெகு நேரம் வரை அதைக் கேட்டுக் கொண்டிருக்கப் பொறுமை இல்லை. ஆனால் தன்னை ஆனந்தன் காப்பாற்றினானே என்பதற்காகப் பல்லைக் கடித்துக் கொண்டு பேசாமல் இருந்தான்.

அப்போது ஆனந்தன் ''பேஷ்! நீ இதைக் கேட்டு ரசித்தாய். இனி இதற்கு மன்னரின் அங்கீகாரம் கிடைக்கப் பாடுபடுகிறேன்'' என்றான். அப்போது அந்த இளைஞன் ''நான் மன்னன் அல்ல என்றாலும்

யாக இருப்பதால் கேட்க முடிகிறது'' என்றாள் அவள். அப்போது ஆனந்தன் ''ஓ! லவனும் குசனும் ராமாயணத்தை இனிமையாகப் பாடிப் பரப்பினார்கள். நானும் என் பேரன்களிடம் இதைப் பாடச் சொல்லிப் பரப்புகிறேன்'' என்று எண்ணித் தான் இயற்றியதைப் பாடச் சொன்னான். அவர்களோ ''இந்தக் கதை நன்றாகவே இல்லை. இராமாயணத்தைப் பாடிக் காட்டுவது போல இதைப் பாட முடியாது'' என்று கூறி விட்டு ஓடி விட்டார்கள்.

தான் எழுதிய தன் கதையைக் கேட்க யாராவது கேட்பார்களா என்று அவன் தன் ஊரில் இரண்டொருவரை அணுகினான். அவர்கள் அவனைக் கண்டதுமே ஓட்டம் பிடித்தார்கள் இனி அந்த ஊரில் யாரும் கேட்க மாட்டார்கள் என்று எண்ணி அவன் அடுத்த ஊரை நோக்கிச் சென்றான்.

மாறுவேடத்தில் வந்த இளவரசனே நான் சொன்னால் என் தந்தை கேட்பார்'' என்றான். அதைக் கேட்ட ஆனந்தன் மகிழ்ந்து போய் ''ஆகா! என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் என் இந்தக் காவியம் ராமாயணத்தைப் போலப் போற்றிப் புகழ்ந்து பேசப் பட வேண்டும். அதை நீங்கள் செய்து விட்டால் எனக்கு நன்றி செலுத்தியது போலாகிவிடும்'' என்றான்.

அதைக் கேட்ட இளவரசன் அனங்கபாலன் திகைத்துப் போனான். வால்மீகியின் ராமாயணம் எங்கே? இவன் எழுதிய இந்த குப்பை எங்கே! இவ்வாறு யோசித்த இளவரசன் அவனிடம் ''சரி என்னைப் போல இதை இன்னமும் எத்தனை பேர்கள் கேட்டார்கள்?'' என்று விசாரிக்கவே ஆனந்தனும் உற்சாகமாக ''இது வரை உங்களையும் சேர்த்து மொத்தம் பன்னிரண்டு பேர்கள் கேட்டிருக் கிறார்கள்'' என்றான்.

அப்போது அனங்கபாலன் ''நம் நாட்டின் மக்கள் தொகை பத்து லட்சம். நீ கூறிய பன்னிரண்டு பேர்கள்போக மீதம் உள்ளவர்கள் உன் காவியத்தைப் புகழ்ந்து பேச ஏற்பாடு செய்கிறேன். ஆனால் நீ எனக்கு ஒரு வாக்குக் கொடுக்க வேண்டும் வால்மீகி முனிவர் தம் வாழ் நாளில் ராமாயணம் ஒன்றைத் தான் எழுதி னார். அவரைப் போல இந்த ஒரு காவியம் எழுதியதோடு நிறுத்தி விட வேண்டும் இனிமேல் எதுவும் எழுதக் கூடாது'' என்றான். ஆனந்தனும் அந்த வாக்கைக் கொடுத்தான். அனங்க



பாலன் ஆனந்தனைத் தன்னோடு கூட்டிக் கொண்டு தலைநகருக்குச் சென்றான். அங்கு அவன் தன் தந்தையிடம் ஆனந்தனை அறிமுகப் படுத்தி ''இவர் வால்மீகி போன்ற கவிஞர். ராமாயணத்திற்கு இணை யாக இவர் ஒரு காவியம் எழுதி இருக்கிறார். அதனை நாட்டில் பிர பலப் படுத்த வேண்டும். இவருக்கு ஒரு உயரிய பதவியும் அளிக்க வேண்டும்'' என்று கூறி ஆனந்தன் எழுதிய காவியத்தின் ஒரே பிரதியாக இருந்ததை மன்னனிடம் நீட்டினான்.

மன்னனும் அதன் மீது ராஜ முத்திரை போட்டு அனங்கபால னிடம் கொடுத்தான். அவனும் அதை பத்திரமாக வைத்திருப்பதாகக் கூறி எடுத்துச் சென்றான். அன்று முதல் நாடெங்கிலும் ஆனந்தன் ராமாய ணத்தைவிட உயர்ந்த காவியம் ஒன்று எழுதி இருக்கிறான் என்று பேசப்

பட்டது. ஆனால் அந்தக் காவியத்தை யாரும் படித்துப் பார்த்ததாகக் கூறவில்லை. அந்தக் காவியத்தின் ஒரே பிரதி இளவரசனிடம் இருந்தது அதைப் படித்து விட்டுத் தருவதாகக் கேட்டவர்களிடம் எல்லாம் அவன் ''அது நெருப்புப் பிடித்து எரிந்து போயிற்று. ஆனந்தனிடம் அதை மீண்டும் எழுதச் சொன்னால் எழுத முடியாது என்று கூறி விட்டான். எனவே அது ஒன்று இருந்தது என்று பேசிக் கொண்டு தான் இருக்க முடியுமேயொழிய அதனை யாரா லும் படிக்க முடியாது என்றே கூறி வந்தான். ஆனந்தனின் அமரகாவியத் தின் கதி இப்படி ஆயிற்று.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''ஆனந்தனின் காவியத்தின் புகழைப் பரப்புவதாகக் கூறிய அனங்கபாலன் அதை வாங்கி வைத்துக் கொண்டு அதை யாருக்கும் படிக்க ஏன் கொடுக்கவில்லை? அதைப் படிக்க விரும்பியவர்களிடம் அது எரிந்து போய் விட்டதாக ஏன் கூறினான்? இக்கேள்விகளுக்குச் சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஆனந்தனிடம் இருந்தது அவன் எழுதிய ஒரே பிரதி. அதை அவன் பன்னிரண்டு பேர் களுக்கு மட்டுமே படித்துக் காட்டி னான்.

அதைக் கேட்டவர்கள் யாருமே அதைப் பாராட்டவில்லை. அது மகா மட்டமானது என்றும் அதற்குப் போய் ராஜ முத்திரை வைக்க வேண்டிய நிலை வந்ததே என எண்ணியே அனங்கபாலன் அதனை யாரும் படித்து விடக் கூடாதே என்று எண்ணி மனம் குமறினான்.

அதற்கு வழி என்ன என்று யோசித்து பார்த்தான் முடிவில் அதனை வாங்கி வைத்துக் கொண்டு அது தீப்பிடித்து எரிந்து விட்டதாகக் கூறினான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






# எல்லாமே புனிதமானது

நம் நாட்டு மக்கள் பல மிருகங்களையும் பறவைகளையும் தெய்வங்களாகக் கருதி வழிபடுகிறார்கள். மூஞ்சூறு விநாய கரின் வாகனமாக எண்ணப் படுகிறது. பரம சிவனாரின் வாகனம் நந்தி எனப்படும் எருது.

அனுமார் குரங்கு இனத்தைச் சேர்ந்தவர். அதனால் குரங்குகளை யாரும் வேட்டை ஆடுவதும் இல்லை. காயப்படுத்துவதும் இல்லை.

சிவனாரின் மைந்தன் முருகனின் வாகனம் மயில். மயில்கள் முருகரின் ஆலயங்களில் வளர்க்கப்பட்டுப் பராமரிக்கப் படுகின்றன.

மகாவிஷ்ணு சேஷன் என்னும் நாகத்தைப் படுக்கையாகக் கொண்டுள்ளார். எனவே பாம்புகளையும் தெய்வமாக வழிபடுகிறார்கள். மகாவிஷ்ணுவின் வாகனம் கருடன். இது கழுகு இனத்தில் ஒருவகை.

கிருஷ்ணருக்கும் பசுக்களுக்கும் நெருங்கிய தொடர்புள்ளதைக் காண்கிறோம். பசுக்கள் சில நாட்களில் பூஜிக்கப் படுகின்றன. கோமாதா என மரியாதையுடன் அழைக்கப் படுகிறது. இவ்வாறு மிருகங் களையும் பறவை களையும் வழிபட்டு வருவதன் வாயிலாக நாம் இயற்கையை எவ்வளவு உயர்வாக மதித்து வருகிறோம் என்பது நன்கு தெரிகிறது அல்லவா?



இந்தியப் புராதனக் கதைகள் - 23

# விடாத உலகபந்தம்

குரு பரமானந்தர் தம் இரு சீடர்களுடன் பல ஊர்களுக்குப் போய் விட்டுத் தம் ஆசிரமத்திற்குத் திரும்பி சென்று கொண்டிருந்தார். அப்போது வந்தனப்பூரை அடைந்த போது அவர் தம் சீடர்களிடம் ''இது தானே நம் ஆசிரமத்தில் என் சீடனாக இருந்த சுமேரின் ஊர்? அவன் யோகம் செய்து நல்ல பயிற்சி பெற்றுக் கொண்டிருந் தான். அப்போது ஒரு நாள் திடீரென்று அவனது தந்தை உடல் நலக் குறைவாக இருக்கிறார் என்று தகவல் வரவே அவன் உடனே ஆசிரமத்தி லிருந்து கிளம்பிச் சென்றான். பிறகு அவன் ஆசிரமத்திற்குத் திரும்பி வரவே இல்லை. இது நடந்து பத்து ஆண்டுகளாகிவிட்டது. அவனைப் பற்றி இங்கு யாரிடமாவது விசாரிக் கலாம்'' என்றார்.

அவரது சீடர்களும் அப்போது அங்கு வந்து கொண்டிருந்த ஒருவனி டம் சுமேரைப் பற்றிக் கேட்டார்கள். அவனும் ''நீங்கள் கேட்பது பரமா னந்தர் ஆசிரமத்தில் படித்த சுமேரைப் பற்றித்தானே? தந்தையின் கடைசி விருப்பப்படி அவர் மணம் புரிந்து கொண்டு அவரது வட்டி வியா பாரத்தை மேற்கொண்டு விட்டார். எல்லாம் தம் குரு பரமானந்தரின் அனுக்கிரகம் என்று அவர் கூறி வருகிறார். அதோ தெரியும் அந்தப் பெரிய வீடுதான் அவருடையது'' என்று கூறி ஒரு பெரிய மாளி கையைச் சுட்டிக் காட்டினான்.





பரமானந்தரும் அவரது சீடர்களும் சுமேரைக் காண அந்த மாளிகைக்குச் சென்றார்கள். தன் குருவைக் கண்டதும் சுமேர் ஓடி வந்து அவரது கால்களில் விழுந்து வணங்கினான். பிறகு அவன் ''குருவே! நீங்கள் என் வீட்டில் எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் தங்கி இருக்கலாம். உங்களுக்குப் பணிபுரிவது என் பாக்கியம்'' என்று பணிவுடன் கூறி நின்றான்.

பரமானந்தர் அன்றிரவு அவன் அளித்த உணவை உண்டார். அவரிடம் தனிமையில் ''குருவே! நான் இந்த உலக பந்தத்தில் சிக்கிக் கொண்டு விட்டேன். என் இரு குழந்தைகளும் வளர்ந்து பெரியவர்கள் ஆனதும் நான் என் வியாபாரத்தை அவர்களிடம் ஒப்படைத்து விட்டு தங்களது ஆசிரமத்திற்கு வந்து என் மீத வாழ் நாட்களை அங்கேயே கழிக்கிறேன்'' என்றான்.

பரமானந்தரும் ''சரி அப்படியே செய். எனக்குப் பின் ஆசிரமப் பொறுப்பை வகிப்பவரிடம் உன்னைப் பற்றி சொல்லி வைக்கிறேன்'' என்றார். மறுநாள் அவர் சுமேரை ஆசீர்வதித்து விட்டு அங்கிருந்து புறப்பட்டுத் தன் ஆசிரமத்தை அடைந்தார்.

இதற்குப் பின் பத்து ஆண்டுகள் கழிந்தன. பரமானந்தர் தம் பயணத்தின் போது வந்தனப்பூரருகே செல்கையில் ஊருக்குள் போய் சுமீரின் மாளிகைக்குச் சென்றார். அவரைக் கண்டதும் சுமேர் ஓடி வந்து அவரது கால்களில் விழுந்து வணங்கி ''குருவே! எனக்குப் பேரன் பிறந்திருக்கிறான். அவன் வளர்ந்து பெரியவனானதும் நான் தங்கள் ஆசிரமத்திற்குக் கண்டிப்பாக வந்து விடுவேன்'' என்றான். பரமானந்தரும் சிரித்துக் கொண்டே அப்படியே செய் என்று கூறி விட்டுத் தம் பயணத்தைத் தொடங்கினார்.

கொஞ்ச காலத்திற்குப் பின் பரமானந்தர் காலமாகி விடவே இறக்குமுன் ஆசிரமத்தின் பொறுப்பை ஏற்ற கங்கானந்தரிடம் சுமேரைப் பற்றிக் கூறி அவன் வந்தால் ஆசிரமத்திலேயே இருக்கும்படி செய்து விடச் சொன்னார். கங்கானந்தரும் ஒருநாள் சுமேரைப் பார்க்க வந்தனப்பூருக்குச் சென்றார். ஆனால் அங்கே போன போது தான் சுமேர் இறந்து விட்டான் என்பது தெரிந்தது. கங்கானந்தரை சுமேரின் மகன்கள்

வரவேற்று உபசரித்தார்கள். கங்கானந்தர் வந்ததிலிருந்து அந்த வீட்டிலிருந்த வளர்ப்பு நாய் அவரைச் சுற்றிச் சுற்றி வந்து அவரது காலை நக்கியது. கங்கானந்தர் யோகத்தில் அமர்ந்து அந்த நாயின் ஆவியுடன் பேசவே அந்த நாயினுள் சுமேரின் ஆவி புகுந்திருப்பதை அறிந்து கொண்டார். அந்த நாய் அந்த மாளிகையையும் சுமேரின் இரு மகன்களையும் பேரன்களையும் பாதுகாத்து வந்தது.

இதற்கு ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகும் கங்கானந்தர் வந்தனப்பூருக்கு வந்து சுமேரின் மாளிகைக்குச் சென்றார். ஆனால் முன்பு அவரைச் சுற்றிச் சுற்றி வந்த நாய் இறந்து போயிருந்தது அதனால் சுமேரின் ஆவி எங்கே போயிற்று என அவர் யோக நிஷ்டையில் ஆழ்ந்து காண முயன்றார். அது ஒரு நல்ல பாம்பினுள் புகுந்து அந்த வீட்டில் விலையுயர்ந்த பொருள்கள் வைக்கப் பட்டிருந்த பெரிய மரப் பெட்டிக்குள் இருந்து கொண்டு அவற்றிற்குக் காவல் காப்பதை அறிந்து கொண்டார். அக்குடும்பத்தவரிடம் ஒரு நல்ல பாம்பு பெரிய மரப் பெட்டிக்குள் இருப்பதாக அவர் தெரிவிக்கவே அவர்கள் பயந்து போனார்கள்.

அவர்கள் அந்தப் பாம்பைப் பிடிக்க ஒரு பாம்பாட்டியை அழைத்து வந்தார்கள். அவன் அப்பெட்டிக்குள் புகையைப் புகுத்தி அந்தப் பாம்பை அசைய முடியாதபடி செய்தான். பிறகு அவன் அதை வெளியில் எடுக்கவே ஒரு வேலையாள் தடியால் அதை அடித்துக் கொல்லப் போனான். கங்கானந்தர் அவனைத் தடுத்து அந்தப் பாம்பை ஒரு பானைக்குள் போடச் சொன்னார். பிறகு அந்தப் பானையை அவர்தம் ஆசிரமத்திற்குக் கொண்டு போனார். அங்கு அவர் சில சடங்குகளைச் செய்து இறக்கும் நிலையிலிருந்த அந்தப் பாம்பின் உடலிலிருந்து சுமேரின் ஆவியை வெளியேறச் செய்து அதற்கு முக்தி கிடைக்கச் செய்தார்.

அப்போது அவர் ''சுமேர் என்னுடன் ஆசிரமத்தில் படித்த போது யோக நிஷ்டையில் எப்படி மூழ்கி இருந்தான்! ஆனால் உலக பந்தத்தில் சிக்கி எப்படித் தாழ்ந்து போனான். இது தான் மாயை என்பது'' என எண்ணி ஒரு பெருமூச்சு விட்டார்.






## ஆயிரம் கேமிராக்கள் 'பளிச்' 'பளிச்'

அனைத்துக் கேரள போட்டோகிராஃபர்கள் சங்கம் ஆகஸ்ட் மாதம் திருவனந்தபுரத்தில் உலகப் போட்டோகிராஃப் நாளைக் கொண்டாட ஒரு சிறப்புக் கூட்டத்தைக் கூட்டியது. அதில் அமைச்சர்களும், சட்ட மன்ற உறுப்பினர்களும், பலபிரமுகர்களும் கலந்து கொண்டார்கள். இதனைப் படமாக்க ஆயிரம் போட்டோகிராஃபர்கள் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்திருந்தார்கள். ஒரே சமயத்தில் அவர்களது ஆயிரம் கேமிராக்கள் ''பளிச்'' பளிச்சென்று ஒளிவீசி படங்களை எடுத்தது ஒரு உலக சாதனையாகக் கருதப் படுகிறது. இதை உலகச் சாதனைகளை வெளியிடும் 'கின்னஸ் புக்கில்' சேர்க்க அச்சங்கம் முயற்சிக்கிறது.

## படித்த கல்வி நிறுவனத்திற்கு பண முடிப்பு



முப்பது ஆண்டுகளுக்கு முன் டாக்டர் பிரபு கோயல் என்பவர் கான்பூரின் இந்திய தொழில் நுட்பக்கல்வி கழகத்தில் (ஐ.ஐ.டி) படித்தவர். அவர் தற்போது அமெரிக்காவிலிருந்து கான்பூருக்கு வந்து பத்து லட்சம் டாலர்களை அங்கு ஆய்விற்கும் முன்னேற்றத்திற்கும் அளித்து அதற்கான என்டோன்மென்ட் அமைத்துள்ளார்.

அமெரிக்கா சென்று டாக்டர் பட்டம் பெற்று அவர் கலிஃபோர்னியாவில் ஒரு பாதுகாப்புக் கூட்டுப் பணி நிறுவனத்தில் சேர்ந்து ஒரு புதிய உத்தியைக் கண்டு பிடித்தார். அது அவருக்கு நிறையப் பணத்தை அள்ளித் தந்தது.

அது மாதிரி ஆராய்ச்சி இந்தியாவிலும் நடக்க வேண்டும் என்று டாக்டர் கோயல் விரும்பியே கான்பூர் ஐ.ஐ.டிக்கு இந்தப் பெருந்தொகையை அளித்து நாட்டின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவி இருக்கிறார்.

# நழுவிப்போன உளவாளி

முதலாவது உலகப் போர் அப்போது நடந்து கொண்டிருந்தது. 1917ல் பிரிட்டிஷ் இரகசியப் போலீஸ் துறைக்கு ஒரு சோதனை காலம் ஏற்பட்டது. அதன் தலைமை அதிகாரி அப்போது கிழக்குப் பகுதியில் பிரிட்டிஷ் துருப்புகளுடன் இருந்தார். அங்கு எதிரியின் உளவாளிகள் பலர் மறைந்து இருப்பதாக அந்த அதிகாரிக்குத் தெரிந்தது. அவர்களது தொல்லைகளிலிருந்து படை வீரர்கள் தப்ப எவ்விதப் பயிற்சி அளிப்பது என்று அவர் கவலைப் பட்டு யோசிக்கலானார்.



மேனரிங் என்ற அதிகாரிக்கு ஃப்ரிட்ஜ் என்ற ஜெர்மன் உளவாளி அங்கு ஊடுருவி இருப்பதாக தெரிய வந்தது. அவன் மாறு வேடத்தில் இருந்து அங்குள்ள போர் ரகசியங்களைச் சேகரித்து அனுப்புகிறானாம். ஆனால் அவனைப் பற்றியும் அவனது நடவடிக்கை பற்றியும் எவ்விதத் தடயமும் மேனரிங்கிற்குக் கிடைக்கவில்லை. அது பற்றி அவர் தம் மேலதிகாரிகளுக்கு எடுத்துக் கூறவே படை வீரர்கள் அந்த ஜெர்மன் உளவாளியைக் கண்டு பிடிக்க வேண்டும் என்றும் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும் என்றும் அறிவுறுத்தப் பட்டது.

மேனரிங் ஒருநாள் போர்க் கைதிகள் சிறை வைக்கப்பட்டிருக்கும் இடத்திற்குச் சென்றார். அங்குள்ளவர்கள் தன்னை யாரென்று கண்டு கொண்டதைப் பார்த்து அவர் ஆச்சரியப் பட்டார். துருக்கிப் படையிலிருந்து ஓடி வந்து விட்ட ஒரு

கிரேக்கப் போர் வீரன் அவரைக் கண்டு பேச விரும்புவதாக அவரிடம் தெரிவிக்கப்பட்டது. அவன் அவரைக் கண்டு கூறிய விஷயத்தைக் கேட்டு அவர் திகைத்துப் போனார்.

அவன் அவரிடம் ''நீங்கள் தேடும் நபரைப் பற்றிய விவரங்கள் எனக்குத் தெரியும். ஏனென்றால் அந்த ஃப்ரிட்ஜுக்காக உளவு பார்த்துத் தகவல்களை முன்பு கொடுத்துக் கொண்டிருந்தவன் நான் தான்'' என்றான். மேனரிங் கடுமையாக ''என்ன விளையாட்டுப் பேச்சு இது? என்னை ஏமாற்றவா பார்க்கிறாய்?'' என்று இரைந்தார். அந்த கிரேக்கப் போர் வீரனோ ''இல்லை ஐயா! நான் சொல்வது முழுக்க உண்மை. எனக்கு இந்தச் சிறையிலிருந்து விடுதலை வாங்கித் தந்தால் நான் ஃப்ரிட்ஜைப் பிடிக்க உதவுகிறேன்'' என்றான்.

மேனரிங்கும் நன்கு யோசித்து விட்டு அவனது நிபந்தனையை ஏற்பதாகக் கூறினார். அவனை கிரேக்க தூதரகத்திற்குக் கூட்டிக் கொண்டு போனார். அங்கு அவன் உண்மையிலேயே கிரேக்கப் போர் வீரன் தானா என்பதைச் சரிபார்த்துத் திருப்தி அடைந்தார்.

அதன்பின் அந்த கிரேக்கன் முதலில் தான் ஃப்ரிட்ஜுடன் நல்ல வித உறவே கொண்டிருந்ததாயும் பிறகு மனத்தாங்கல் ஏற்பட்டு அவனோடு சண்டை போட்டுக் கொண்டு பிரிந்து போனதாயும் கூறினான். மறுபடியும் அவனைச் சந்திக்க வேண்டும் என்றால் சில ராணுவ



ரகசியங்கள் தன்னிடம் இருப்பதாகக் கூறி அவனை நம்ப வைக்க வேண்டும் என்றும் அதற்கு ஏதாவது சில உபயோக மற்ற ராணுவத் தகவல்கள் தனக்குத் தேவை என்று அவன் மேனரிங்கிடம் கூறினான்.

மேனரிங்கும் அந்த கிரேக்கனிடம் கவைக்குதவாத இராணுவத் தகவல் களைக் கொடுத்தார். கிரேக்கனும் அவற்றைப் பற்றி முதலில் ஃப்ரிட் ஜிடம் கூறி நம்ப வைத்து அவனை துருக்கிப் படை முகாமிற்கு ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வந்து நிற்கச் சொல்வதாகக் கூறினான். மேனரிங்கும் அவனை அச்சிறையிலிருந்து வெளியே அனுப்பினார்.

ஒரு வாரம் கழிந்ததும் கிரேக்கன் திரும்பி வந்தான். ஃப்ரிட்ஜ் ஒரு குறிப்பிட்ட நாளில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் பிரிட்டிஷ் படைகள் முகாமின் எல்லையில் வந்து நிற்ப தாகக் கூறினானாம். அச்சமயம் மேனரிங் எங்கோ பதுங்கி இருந்து ஓடி வந்து அவனைப் பிடிக்க

வேண்டும் என்பதை கிரேக்கன் சொன்னான். குறிப்பிட்ட நாளில் குறித்த நேரத்திற்குச் சற்று முன் ஒரு குதிரை மீது ஏறி கிரேக்கன் ஃப்ரிட்ஜ் வரப்போகும் இடத்திற்குச் சென்றான். மேனரிங்கும் சற்றுத் தொலைவில் பதுங்கி மறைந்திருந்தார்.

குறிப்பிட்ட இடத்திற்கு மங்கிய வெளிச்சத்தில் ஒரு உருவம் குதிரை மீது அமர்ந்து வந்து கொண்டிருந்ததை மேனரிங் கண்டார். கிரேக்கன் அவன் தான் ஃப்ரிட்ஜ் என சமிக்ஞை செய்து மேனரிங்கிற்குக் காட்டி விட்டு அவனைச் சந்திக்கச் சென்றான். அவர்கள் பேசிய ஜெர்மன் மொழியை மேனரிங் தெளிவாகக் கேட்டார். கிரேக்கன் ஏன் ஃப்ரிட்ஜிடன் ஜெர்மன் மொழியில் பேச வேண்டும் என்றும் இதில் ஏதோ மர்மம் இருக்கிறது என்றும் மேனரிங் நினைத்து எச்சரிக்கையாகத் தன் கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டார்.



அப்போது திடீரென இரண்டு துப்பாக்கிகளிலிருந்து குண்டுகள் வெடித்து மானிரிங் பதுங்கிய இடத்தில் வந்து விழுந்தன. அவர் சற்றும் தாமதியாமல் தன் கைத்துப்பாக்கியால் கிரேக்கனும் மற்றவனும் நின்ற இடத்தை நோக்கிச் சுட்டார். கிரேக்கனுடன் பேசிக் கொண்டிருந்தவன் தப்பி ஓடி விட்டான். குண்டு அவன் மீது படவில்லை கிரேக்கனோ சற்றும் தாமதியாமல் தன் குதிரையைத் தட்டி விட்டு சிட்டாய்ப் பறந்து விட்டான்.

கிரேக்கன் பிறகு வந்து தன்னைப் பார்ப்பான் என்று எண்ணியவாறே மேனரிங் தான் பதுங்கி இருந்த இடத்திலிருந்து வெளியே வந்தார். ஆனால் கிரேக்கன் வெகு நேரமாகியும் வரவில்லை. அவன் தன்னை ஏமாற்றி விட்டானோ என்று எண்ணியவாறே அங்கிருந்து சென்று விட்டான்.

ஆனால் மறுநாள் கிரேக்கன் வந்து '' பிரிட்ஜ் திடீரென குண்டு வெடிப்பைக் கேட்டு பயந்து ஓடி விட்டான். நான் நாளை அதே இடத்திற்கு வரச் சொல்லி இருக்கிறேன். அவனும் வருவான். அப்போது நீங்கள் மறைந்திருந்து சமயம் பார்த்து வந்து அவனைப் பிடித்துக் கொள்ளுங்கள்'' என்றான். மறு

நாளும் குதிரையில் அமர்ந்து ஒருவன் வந்து கிரேக்கனுடன் பேசலானான். அப்போது மறைந்திருந்த மேனரிங் அவனை குறி வைத்துச் சுட்டார். அவன் குண்டடி பட்டு விழுந்தான். கிரேக்கன் ஓடி விட்டான். குண்டடி பட்ட ஃப்ரிட்ஜைக் கண்டு அவனைப் பிடித்து கொண்டு பிரிட்டிஷ் படை முகாமிற்குச் செல்லலாம் என்று விரைந்து சென்றார். அப்பாடா! ஃப்ரிட்ஜைப் பிடித்தாகி விட்டது என்று மகிழ்ந்தவாறே அவர் குதிரையிலிருந்து குண்டடி பட்டு விழுந்த மனிதனைப் பார்த்தார். அப்போது அவர் திகைத்தே போனார். ஏனென்றால் குண்டு பாய்ந்து விழுந்தது ஒரு ஆணல்ல, பெண் தான்!

மேனரிங்கின் ஏமாற்றத்தைச் சொல்லி முடியாது. மேலும் ஒரு பெண்ணைச் சுட்டுவிட்டதாக எண்ணி அவர் மிகவும் வருந்தினார். அப்போது தான் கிரேக்கன் ஏமாற்றி விட்டு ஓடி விட்டான் என்பதை அவர் புரிந்து கொண்டார். விசாரணையில் அந்தப் பெண் ஃப்ரிட்ஜின் மனைவி என்றும் கிரேக்கனாக இருந்து வந்தவன் தான் ஃப்ரிட்ஜ் என்பதும் தெரிய வந்தது. அடடா! என் குண்டு இந்தப் பெண்ணின் உடலில் பாய்ந்ததற்கு பதிலாக கிரேக்கனாக நடித்த ஃப்ரிட்ஜ் மீது பாய்ந்து அவனைக் கொன்றிருந்தால் எவ்வளவு சரியாக இருக்கும் என்று மேனரிங் எண்ணிப் பெருமூச்சு விட்டார்.

ஃப்ரிட்ஜ் தலை சிறந்த திறமையான ஜெர்மன் உளவாளி என்பதில் சந்தேகமே இல்லை. அவன் மேனரிங்கிற்கு அகப்படுபவன் போல இருந்தும் தப்பி ஓடி விட்டான். பாவம்! அவனுக்காக அவன் மனைவி குண்டடி பட்டு இறந்தாள்!

போர் முடிந்து சில ஆண்டுகளுக்குப் பின் தற்செயலாக மேனரிங்கும் ஃபிரிட்ஜும் ஒரு காஃபி கிளப்பில் சந்தித்தனர். இருவரும் ஆச்சரியத்துடன் ஒருவரை மற்றவர் பார்த்தவாறே இருந்தார்கள். அவர்கள் ஒருவரையொருவர் அடையாளம் கண்டு கொண்ட போதிலும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. இருவரும் புன்னகை புரிந்தவாறே பிரிந்து சென்றார்கள்.



# வாசகர்களுக்குக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்காணும் கதையைப் படியுங்கள்:**



ஒரு மலை மீதிருந்த கோவிலுக்குப் பல பக்தர்கள் சென்று கொண்டிருந்தார்கள். யாவரும் எதுவும் பேசாமல் சென்று கொண்டிருக்கவே ஒரு இளைஞன் தன்னருகில் இருந்தவனிடம் ''உனக்கு எந்த ஊர்?'' என்று கேட்க அவனும் பிலாஸ்பூர் என்று பதில் கூறினான். அதில் எங்கு வசிக்கிறாய்? என்று இளைஞன் கேட்கவே மற்றவனும் ''கிழக்குப் பகுதியில்'' என்றான். ''அப்படியா! நானும் அதே பகுதியில் தான் வசிக்கிறேன். அதில் உன் வீடு எங்கே இருக்கிறது?'' என்று கேட்டான் இளைஞன். மற்றவனும் ''அங்கு சிவன் கோவிலுக்கு இடது புறம் மூன்றாவது வீட்டில் தான்'' என்றான். அதைக் கேட்ட இளைஞன் ''ஆ! நானும் சிவன் கோவிலுக்கு இடது புறம் மூன்றாவது வீட்டில் வசிக்கிறேன்'' என்றான்.

இதன் பிறகு அந்த இருவரும் பேச்சை எப்படித் தொடர்ந்திருப்பார்கள்?

- இன்னும் இது போல சேர்ந்தது போலுள்ள நிகழ்ச்சிகளோ?
- மற்ற பக்தர்கள் அவர்களது பேச்சில் ஏதாவது புதுமையைக் கண்டார்களா?

உங்களது படைப்பை 100-150 சொற்களுள் எழுதி ஒரு உறையிலிட்டு அதன் மீது வாசகர்களின் கதைப் போட்டி என எழுதவும். உங்கள் படைப்போடு கீழ்க் காணும் கூப்பனையும் நிரப்பி சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : மார்ச் 30, 2004

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ---------------------------------------------------------------------------

வகுப்பு-----------------------------வீட்டு முகவரி-------------------------------------------

------------------------------------------------------------------------------------------------

---------------------------------------------------------------பின்கோடு--------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்


**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



அம்புலிமாமா வழங்கும்







# ஜாஜ்பூர்

ஒரு புனிதமான சுற்றுலா நகரம்

Sponsored by



# ஜாஜ்பூர்

## யாகங்களின் முதலிடம்

முன் காலத்தில் கயாசுரன் என்ற பலமிக்க ராட்சச மன்னன் இருந்தான். அவன் மற்ற ராட்சசர்களைப் போல அல்ல. விஷ்ணு பக்தன் அவன். அவனது தலைநகர் கயா என்று அவன் பெயரிலேயே இருந்தது. அங்கு சென்றவர்களின் பாவங்கள் போக அவர்கள் புனிதர்களானார்கள். அங்கிருந்து திரும்பிய பின் அவர்கள் எந்தப் பாவச் செயலையோ கொடூரத்தையோ அல்லது இழி செயலையோ செய்யாமல் இருந்தனர். மேலும் யார் கயாசுரனைத் தொட்டு விட்டு வந்தார்களோ அவர்களது பாவங்கள் மறைய அவர்கள் விஷ்ணு பக்தர்கள் ஆனார்கள். அதனால்





விரஜா தேவி, ஜாஜ்பூர்

கயாவிற்குச் சென்றவர்கள் எல்லோரும் அந்த ராட்சசனைத் தொட்டுப் புனிதர்கள் ஆனதோடு, இறந்த பின் சொர்க்க லோகத்தையும் அடைந்தார்கள்.

தேவர்களும் ரிஷி முனிவர்களும் சேர்ந்து ஒரு அபூர்வ யாகத்தைச் செய்யத் தீர்மானித்தார்கள். அதற்குச் சரியான இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். யாகத் தீ வளர்க்க புனிதமானதாக இருக்க வேண்டும் என்றும், அந்த இடம் புனிதமானதாக இல்லையென்றால் அவர்கள் செய்யும் யாகம் முழுமை பெறாது என்றும் அதன் புனிதத்தன்மைக்கு களங்கம் ஏற்பட்டு விடும் என்றும் நம்பினார்கள். "யாகம் செய்யும் இடம் கயாசுரனின் உடல் போல பரிசுத்தமாக இருக்க வேண்டும்" என்று தேவர்களும் ரிஷி முனிவர்களும் முடிவு செய்தனர்.

அதைக் கேட்ட கயாசுரன் தன் உடலை யாகத்திற்குத் தருவதாகக் கூறி தன்னுயிர் துறந்து மண்ணில் புதையுண்டான். அவன் புதையுண்டு கிடந்த அந்த இடத்தில் யாகம் செய்யப் பட்டது. அவனது உடல் மிக மிகப் பெரியது. புதையுண்ட அவனது தலை கயாவில் இருந்தது.

அவனது வயிறு நவிகயா என்ற இடத்தில் புதையுண்டு இருந்தது. இந்த நவிகயா ஒரிசா மாநிலத்தில் வைதரிணி நதிக் கரையில் உள்ளது.

நவிகயாவில் யாகம் செய்தால் தாம் விரும்பிய பலனை அடைந்து விட முடியும் என்பதை ரிஷிகளும் முனிவர்களும் அறிந்தே இருந்தார்கள். அதனால் யாகம் செய்வதற்கு நவிகயாவைத் தான் தேர்ந்தெடுக்கலானார்கள். யாகம் செய்வதற்கு மிகவும் புனித இடமாக நவிகயா கருதப் பட்டது. அதனால் பிரம்மா கூட இந்த இடத்தில் யாகம் செய்தார். அவர் செய்த யாகத்தீயிலிருந்து சக்தி தேவி விரஜா வெளி வந்தாள். முனிவர்கள் அவளைத் துதிக்கவே அவர் களின் பக்தியால் மகிழ்ச்சியுற்ற



விரஜையும் அங்கே நிரந்தரமாக இருந்து விடுவதாக வாக்களித்தாள். அதிலிருந்து விரஜா தேவி அந்நகர தேவதையாக விளங்கி வரலானாள்.

நாளா வட்டத்தில் இங்கு யாகங்கள் பல செய்யப்படவே இது யக்ஞபுரம் என்ற பெயரைப் பெற்றது யாகம் என்பது யஜம் என்றும் கூறப்பட்டு இந்த இடம் ஜாஜ்பூர் என்ற பெயரை அடைந்தது. இன்றும் அதற்கு அதே பெயர் தான். வேதபுராணங்கள் இந்த இடத்தை விரஜக்ஷேத்திரம் எனக் கூறுகின்றன. இங்குள்ள அம்மன் விரஜையின் பெயரில் தான் இந்நகர் பிரபலமானது. பல நூற்றாண்டுகளுக்கு முன் இது முக்கிய க்ஷேத்திரமாக விளங்கியது. ஒரிசாவின் பழம் பெருமை பற்றி பேராசிரியர் தாமஸ் யூஜீன் டொனால்ட்சன் இவ்வாறு கூறுகிறார்: ‘‘இந்தியாவில் வடகிழக்குப்



விரஜா தேவியின் ஆலயம்

பகுதியுள்ள ஒரிசாவில் ஐந்து பெரிய க்ஷேத்திரங்களில் ஐந்து கடவுள்கள் வழிபடப் படுகிறார்கள். புவனேஸ்வரில் சிவபிரானும், புரியில் விஷ்ணுவும், கோனார்க்கில் சூரிய பகவானும், மகாவிநாயகில் கணேசரும், ஜாஜ்பூரில் விரஜதேவியும் வழிபடப் படுகின்றனர்.''



சுபஸ்தம்பம்

முன் காலத்தில் ஒரிசா கலிங்கம் என்றும் உத்ரதேசம் என்றும் உத்கல் என்றும் குறிப்பிடப்பட்டது. ஒரிசாவின் தலைநகரமாக ஜாஜ்பூர் விளங்கியது. ஆறாவது நூற்றாண்டில் ஜஜாதிகேசரி என்ற மன்னன் கன்யா குப்ஜத்திலிருந்து பத்தாயிரம் பிராம்மணர்களை அழைத்து வந்து இங்கு ஒரு மாபெரும் யாகத்தைச் செய்தான். அவனோ அல்லது அவனது சந்ததியினரோ இங்கு ஒரு பெரிய கருடத்வஜகம்பத்தை நிறுவினார்கள். இது சுபஸ்தம்பம் என்ற பெயரில் உள்ளது.

முன் காலத்தில் ஜாஜ்பூர் தாந்திரீகம் பயிலும் மையமாக விளங்கியது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் நேபாளத்திலிருந்தும் திபெத்திலிருந்தும் நூற்றுக்கணக்கில் மாணவர்கள் இங்கு வந்து தாந்திரீகம் பயின்றார்கள். இதற்கு விரஜ தேவி கோவில் மண்டபம் பயன்பட்டது. இதன்



ஜெகன்னாதரின் ஆலயம்

காரணமாக இக்கோவிலைச் சுற்றி பல கோவில்கள் ஏற்பட்டவை. அவை தாந்திரீக சம்பந்தமுள்ள பெயர்களான பைரவர், பைரவி என்ற பெயர்களைக் கொண்டுள்ளன. இக்கோவில்கள் நாளடைவில் பாழடைந்தன. இவற்றின் இடிபாடுகளிலிருந்து கிடைத்த சிற்பங்களில் அக்கால சிற்பக் கலை உயர்வைக் காண முடிகிறது.

ஆனால் காலப்போக்கில் இந்த பழம்பெறும் கட்டிடங்கள் பாதுகாப்பாக இருந்ததா? என்றால், இல்லை என்றுதான் சொல்ல வேண்டும் ஏனென்றால் இவை பதினாறாவது நூற்றாண்டில் அந்நியத் தாக்குதலால் அழிந்தனவாம். குறிப்பாகத் தாக்கப்பட்டது என்றே சொல்லலாம். படை எடுத்தவன் ஒரிசாவின் ஒரு

கோவிலைக் கூட விடாது என்று இடித்துத்தள்ளிக் கொண்டே சென்றான். மண்டபங்கள் சிலைகள் என்று எல்லாம் நொறுங்கின. கோவில்களின் மூல விக்கிரங்களை நொறுக்க முடியாது போனாலும் அவை சேதப் படுத்தப்பட்டன. இந்த வெறித்தனமான செயலைச் செய்தவன் காலாபஹாட் என்பவன். அவன் சுபஸ்தம்பத்தை இழுத்துத் தள்ள முயன்றான். ஆனால் அது முடியவில்லை. அதில் செதுக்கப் பட்ட கருட உருவம் பழுதடைந்தது.

இந்த காலாபஹாட் என்பவன் வங்காளத்தை ஆண்ட சுலைமான் கார்ரானி என்ற ஆப்கானிய சுல்தானின் படைத்தலைவன். இவன் ஜெகன்னாதபுரியின் கோவிலைக் கொள்ளை அடித்தான். புவனேஸ்வரத்துக் கோவிலை இடித்துப் பாழாக்கினான். இதன் பின் அவன் அஸ்ஸாமிற்குப் போய் குவாஹத்திக்கு அருகிலுள்ள பிரபல காமாக்கிய அம்மன் ஆலயத்தைத் தாக்கி னான். முடிவில் அக்பர் சக்கர



வர்த்தியின் கடற்படையை எதிர்த்துப் போரிட்ட போது இவன் மாண்டான். இதனால் இதன் பழம் பெருமை குன்றி விடவில்லை. யாகங்கள் புரிய தசாஸ்வமேத கட்டம் இருந்தது. நதிக்கரையில் சப்தரேகா என்னுமிடத்தில் தான் முனிவர்களும், சாதுக்களும், தேவர்களும் நீராடினார்களாம். வைதரணி நதிக்கரையில்உள்ளவராக வரதநாதர் ஆலயமும் சப்த மாத்ரிகா மண்டபமும் பழங்காலப் பெருமைக்கு எடுத்துக் காட்டு. சப்தமாத்ரிகா மண்டபத்தில் ஐராவதத்ருதா, சுபேஸா, சாலங்காரா, வஜ்ரஹஸ்த இந்திராணி, கருடாசன சாந்த ஹஸ்த வைஷ்ணவி, விருக ருத்த திரிசூல பரதாரிணி, சந்திரரேகா விபூஷண மாஹேஸ்வரி, சிகிவாகன கண்டஹ்ரூப கௌமாரி, ஹம்சபுருஷ்த ஸஸ்மருத சர்வாபாரண பூஷித பிராம்மணி, மகிஷாஸன வராகவதன வராஹி, நக்னதேக சர்ப்பபூஷி தகபரி முண்ட மாலினி பிஷன சாமுண்டா என்ற இந்த தேவதைகளின் விக்கிரகங்கள் உள்ளன இந்தப் பெயர்களிலிருந்து தாந்திரீக, மாந்திரீக சக்திகள் பற்றி அறியலாம். பெயர் களுக்கு ஏற்ப அந்த விக்கிர



நடனமாடும் சாமுண்டா; பைரவர்

கங்கள் அழகானவை. விரஜாதேவியின் சக்தியால் பல தேவதைகள் தோன்றி னவாம். நவதுர்க்கா, அஷ்ட சண்டி, அறுபத்து நான்கு யோகினிகள் என்பன அவை. இவை எல்லா வற்றிற்கும் மண்டபங்கள் உள்ளன. ஒரு பழங்காலக் கதையின் படி அக்னீஸ்வர் எனப்படும் சிவபிரானின் அம்சம் ஒவ்வொரு நாளும் நிறம் மாறிக் கொண்டே இருக்கிறதாம். இதைத் தாமே பார்த்ததாகப் பலர் உறுதிபடக் கூறுகிறார்கள்.



திரிலோச்சனேஷ்வரர் ஆலயம்

தாந்திரீகயுகம் முடிவடையும்போது புத்த மதத்தின் தாக்கம் ஏற்படலாயிற்று. ஜாஜ்பூரிலிருந்து ஒரு மைல் தொலைவில் மூன்று குன்றுகளில் புத்தமதத் தடயங்கள் ஏராளமாக உள்ளன. அக்குன்றுகள் உதயகிரி, லலித்கிரி, ரத்னகிரி என்பவை. சீன யாத்ரீகன் ஹ்யூன்சங் இப்பகுதியைப் புஷ்பகிரி என்று குறிப்பிட்டிருக்கிறார். இதை ஒரிசாவின் நாலந்தா எனக் கூறலாம். ஒரு குன்றில் ஒரு ஸ்தூபத்திற்கான மேடை இருந்தது. அது இடிந்து விழுந்ததும் அங்கிருந்து புத்தரின் அஸ்தி கண்டெடுக்கப் பட்டதாம்.

அதை ஒரு பெட்டியில் வைத்து பத்திரமாக அரசாங்கம்



உதயகிரியின் மடாலயம்

வைத்துள்ளது. இந்தக் குன்றுகளில் ஏராளமான புத்தர் சிலைகளும் புத்தரின் வாழ்க்கை பற்றிய நூல்களும் கிடைத்துள்ளன. இது நிஷ்டைக்காகவும் தியானத்திற்காகவும் மட்டும் அல்லாமல் கல்வி, பண்பாட்டை அளிக்கும் இடமாகவும் இருந்ததாக அகழ் ஆய்வில் தெரிய வந்துள்ளது. ஆயிரக்கணக்கானோர் தங்கி இருக்க இங்கு வசதிகளும் செய்யப்பட்டிருந்தன. முதலில் அமைந்த புனிதத்தலம் ஜாஜ்பூரும், புத்த மதத்தாபனங்களும் இணைந்து செயல்பட்டதாகத் தெரிகிறது. அதனால் தான் ஜாஜ்பூரில் புத்த சிலைகள் தென்படுகின்றன.

ஒரு காலத்தில் புத்த மதச் சடங்குகள் தாந்திரிகத்துடன் கலந்து புதிய வழி முறைகளை ஏற்படுத்தி இருந்தன. இதற்கும் ஜாஜ்பூர் மையமாக இருந்தது. தேவ தேவதைகள் புதுப்புது விதங்களில் சித்தரிக்கப்பட்டன. ஆனால் இந்த

வேதாந்தக் கொள்கை மறைந்து விட்டது. இது பற்றி கோராசந்த் பட்நாயக் என்ற வரலாற்று ஆசிரியர் இவ்வாறு கூறுகிறார்:

"ஜாஜ்பூர் நகரத்து ஹனுமனேஸ்வர ஆலயத்து வெளிச் சுவரில் பதிக்கப்பட்ட மஹிஷ மர்த்தினியின் உருவம் முற்றிலும் மாறுபட்டதாக உள்ளது. எட்டு கைகளுடைய அந்த தேவி தனது இடது கையால் அந்த ராட்சசனின் தோளை அழுத்தி தனது வலது கை சூலத்தால் அவனது உடலைக் குத்துவது போலக் காட்டப் பட்டுள்ளது. மற்ற கைகளில் வாள் சக்கராயுதம், கேடயம், வில், அம்பு, பாம்பு முதலியன உள்ளன. ராட்சசனுக்கு எருமைத் தலை உள்ளது போலக் காட்டப் பட்டிருக்கிறது. தேவி அமர்ந்திருக்கும் சிங்கமும் ராட்சசனைத் தாக்கிக்



ரத்னகிரி



கொண்டிருக்கிறது.'' பேராசிரியர் டோனால் ட்சன் கூறுவதாவது: ''புத்தர் சிலைகள் பல ஜாஜ்பூரிலிருந்து ஏழு மைல் தொலைவிலுள்ள காதி பாடாவில் கண்டு பிடிக்கப் பட்டது. ஜாஜ்பூரில் ஒரிசா விலேயே மிகப் பெரிய புத்தர் சிலையும் கண்டு பிடிக்கப் பட்டது. உடைந்த இச்சிலை காலும் பீடமும் இல்லாம லேயே பதினாறு அடி உயர முள்ளது. ஜாஜ்பூரில் புத்தமதமும் வேரூன்றி வளர்ந்திருந்தது என்பதை, வைதரணி நதிக்கு எதிர்க் கரையிலுள்ள சோலம்பூரில் ஆங்காங்கே சிதறிக்கிடக்கும் இருபத்திஐந்து புத்தர் சிலைகள் உறுதிப் படுத்துகின்றன.''

முடிவில் இப்பேராசிரியர் ''ஜாஜ்பூரில் ஆலயங்களும் வரலாற்றுச் சின்னங்களும் சேதப் படுத்தப்பட்டிருந்த போதிலும் இன்னமும் இங்குள்ள சிலைகள் அழகாகவும் பண்டைக் காலப் பெருமையை காட்டுவதாகவும் கலைத் திறன் கொண்டதாகவும் விளங்குகின்றன. இது அக்காலத்தில் மையமாக விளங்கி புனிதத்தலம் எனப் பெயர் பெற்று புகழ் பெற்ற தேவி உபாசனை க்ஷேத்திரமாக இருந்தது.''

# பண்டிகைகளும், திருவிழாக்களும்

## வருணிப் பண்டிகை

வருணிப் பண்டிகை ஜாஜ்பூரில் நடைபெறும் ஒரு முக்கியமான பண்டிகையாகும். பங்குனி மாதத்தில் (மார்ச்-ஏப்ரல்) தேய்பிறை காலத்தில் பதின்மூன்றாவது நாள், வருணி தினம் என்ற பெயரில் புனிதமான நாளாகும். அன்று பல்லாயிரக் கணக்கானவர்கள் வைதரணி நதியில் புனித நீராடிக் கொண்டாடுகிறார்கள். அந்த தினம் சனிக்கிழமையாயிருந்தால், அதற்கு மகாவருணி எனவும், அந்த சனிக்கிழமை சுபமான நேரத்திற்கு மகாமகா வருணி எனவும் பெயர். அப்படிப்பட்ட குறிப்பிட்ட நல்ல நேரத்தில் நதியில் நீராடினால் மிகவும் புண்ணியம் கிடைக்கும் என்று கருதப்படுகிறது.

## திரிவேணி அமாவாசை

தை அமாவாசையை விரஜா தேவியின் பிறந்த தினமாகக் கருதப்பட்டு, அன்று தேவியை சாவித்திரியாகக் கருதி ஒப்பனை செய்து, காயத்ரி மந்திர கோஷத்துடன், தேவியை வழிபடு கின்றனர்.

## இரத யாத்திரை

புரட்டாசி மாதம் (செப்டம்பர்-அக்டோபர்) வளர்பிறை முதல் நாளிலிருந்து தொடங்கி, ஒன்பது நாள் வரை விரஜா தேவிக்கு இரதயாத்திரை திருவிழா கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு நாளும் விரஜாதேவி நன்கு அலங்கரிக்கப்பட்டு ஓர் இரதத்தில் கோவிலைச் சுற்றி ஊர்வலமாக எடுத்துச் செல்லப் படுகிறாள். முதன் முதலில் தேவி ஒரு கம்பு அல்லது கழி வடிவத்தில் தோன்றியதை ஒட்டி, ஒரு மரத்திலான கம்பில் வெள்ளிக் கவசம் போட்டு, வைரக்கற்களால் அலங்கரித்து, அதுவும் இரதத்தில் வைக்கப்படுகிறது. ஒன்பதாவது நாள் அல்லது இறுதிநாள் நடு இரவு நேரம் தேவி கோயிலைச் சுற்றி ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு, வடகிழக்கு மூலையில் நிறுத்தி தேவிக்கு முன்பாக பூசாரி நான்கு அம்புகளை நான்கு திசைகளில் எய்துகிறார். இத்துடன் இரதயாத்திரை முடிவுபெற்று தேவி கோயிலுக்குள் சென்று விடுகிறாள். இந்த நடு இரவு உற்சவத்திற்கு 'லாக்கபிந்தா விழா' என்று பெயர். இரதத்தில் தேவி உலா வருவதைக் கண்டால், தங்கள் பாவ வினைகள் நீங்கி முக்தி அடைவர் என்று நம்பப்படுகிறது.



## ஜாஜ்பூருக்கு அருகில்




### சாடியா

ஜெகன்னாதரும், தேவி சுபத்ராவும் உறையும் இந்த சாடியா கோயில் பார்க்க வேண்டிய ஒன்று. இங்கு ஜகந்நாதரின் இடப்பக்கத்தில் தேவி அமர்ந்துள்ளாள்.

### அசோக் ஜாட்

மஹாகிரி மலைகளின் ஊடே அடர்ந்த காடுகள் சூழ அமைந்துள்ள அசோக் ஜாட் கோயிலில், பக்த கோடிகளுக்கு அருள் பாலிக்க அசோகேஸ்வரர் உள்ளார்.

### சாண்டிக்கோல்

பாபா பைராபனந்தா ஆசிரமத்திற்கு அருகில் உள்ள இந்த மலைப் பிரதேசம், சுற்றுலாப் பயணிகள் கண்டு களிக்க வேண்டிய இயற்கை காட்சிகள் நிறைந்த இடம்.

### முல்லாபல்

இங்கு கோயில் கொண்டுள்ள சிவபெருமான், தன்னை துதிப் போர்களின் உடற்பிணிகளை நீக்கி குணமாக்குகிறார்.

## வியாச சரோவர்

வியாச மகரிஷியின் பெயரையொட்டி உண்டான இந்த இடம், மிகப் புனிதமாகக் கருதப்படுகிறது. வியாசரிஷி, ராக்கீ கோசேஸு்ம் அல்லது ராகப்தாஸ் ஆகியோரது உருவச் சிலைகள் இங்கு வழிபடப் படுகின்றன. இந்தத் தலத்தைப் பற்றி பல புராணக்கதைகள் உண்டு. தன்னுடைய உயிருக் கஞ்சி துரியோதனன் இங்கு சிலகாலம் ஒளிந்திருந்ததாக ஒரு புராணக் கதை கூறுகிறது. இங்கே ஒவ்வொரு ஆண்டும், மக சுக்ல ஏகாதசி தொடங்கி ஒரு வாரத்திற்கு நடைபெறும் சந்தை பிரபலமானது. ஜகந்நாதர் கோயில், வியாசரிஷி ஆஸ்ரமம், குப்தகங்கா ஆகியவை சுற்றுலாப் பயணிகள் மிகவும் விரும்பிப் பார்க்கும் இடங்களாகும்.

## கோகர்னிகா

பிராம்மணி நதிக்கரையில் அமைந்த கோகர்னேஸ்வரர் மகாதேவா என்ற பெயர் பூண்ட சிவபெருமான் திருக்கோயில் பார்க்க வேண்டிய இடங்களில் ஒன்று.

## மகாவினாயக்

இங்குள்ள வினாயகரை வழிபடுவதுடன், பஞ்சமுக லிங்கத்தையும் கண்டு வணங்க முடியும். சண்டிக்கோலுக்கு அருகில் உள்ளது.

## இரத்னகிரி-லலித்கிரி-உதயகிரி

புத்தமதம் தழைத்தோங்கி பகவான் புத்தரின் வழிபாடு சிறப்புற்று விளங்கிய தலங்களான மூன்று மலைகள் சேர்ந்த இந்த இடத்தில் 'புஷ்பகிரி' என்ற பெயரில் அந்தக் காலத்தில் புத்தமதப் பல்கலைக் கழகம் இருந்தது. இங்குள்ள பாழடைந்த புத்த விஹாரங்களும், உடைந்த புத்த பகவானின் உருவச் சிலைகளும் ஒரு காலத்தில் புத்தமதம் இங்கு எவ்வாறு சிறப்புடன் இருந்தது என்பதை பறைசாற்றுகின்றன. இந்த இடத்தின் பெருமைகளைப் பற்றி ஹ்யூன்சங் என்ற சீன யாத்ரிகர் தனது பயணக் குறிப்பில் விரிவாக எழுதியுள்ளார்.



## ஜாஜ்பூருக்குச் செல்லும் வழி

- ❖ அருகிலுள்ள விமான நிலையம் - புவனேஸ்வர் - 120 கி.மீ தொலைவு.
- ❖ அருகிலுள்ள இரயில் நிலையம் - ஜாஜ் பூர் - சென்னையிலிருந்து கொல்கத்தா செல்லும் வழியில், கியோஞ்சார் ரோடிலிருந்து 35 கி.மீ. தொலைவில்.
- ❖ கட்டக், புவனேஸ்வர், கொல்கத்தா ஆகிய நகரங்களிலிருந்து பஸ் வசதியும் உண்டு.

## தங்குமிடம்

- ❖ விராஜா பந்தசாலா (ஒரிசா சுற்றுலாப் பயணிகள் கழகம்)<br>தொ.பே. எண் 06728-222029
- ❖ மோனோரிலாஷ் லாட்ஜ்<br>தொ.பே. எண் 06728-222134
- ❖ ஹோட்டல் சத்யா<br>தொ.பே. எண் 06728-223751
- ❖ ஹோட்டல் ஆஷ்ரயா<br>தொ.பே. எண் 06728-224243

மேலும் விவரங்களுக்கு, அணுக வேண்டிய இடம்
விராஜா பந்தசாலா, ஜாஜ்பூர் (06728-222029),
டூரிஸ்ட் கௌண்டர், கே.கே.ரோடு,
(06728-220242),
டூரிஸ்ட் கௌண்டர், கட்டக் இரயில் நிலையம்,
(0671-2620507),
டூரிஸ்ட் ஆபிஸ், கட்டக் (0671-2312225)

# Touch Orissa to feel India

Feel the pulse of Orissa... and you will hear the throb of India. In diversity lies the unity of the age-old traditions. The " Rath Yatra " of Lord Jagannath transcending the boundaries of the nation is now a universal sensation. The teeming millions, with hearts full of devotion, the throbbing drums, the frenzied cymbals, the roar of the crowds, the chanting of the priests.... that is India for you, and of course, her immortal tradition. Orissa has the pride of preserving and protecting its simple and arcadian past by cradling under her wings 62 distinct tribal groups,... complete, with their indigenous customs, rhythms of dance, beliefs and traditional festivals. Orissa's ancient art and craft have its strong tribal traditions kept ablaze in the new Millennium. Applique in Orissa is an old temple-art that brings about a marriage of technicolours on cloth. Cross-cultural influences are seen in the silver and breath-taking renditions of silver-craft which leave the viewers breathless.

Stroll into Orissa and walk hand in hand with the tradition of India.

*Tradition*

*Explore*
ORISSA
**The soul of India**






[illegible] information contact: Director, Tour[illegible] Bhavan, Bhubaneswar-751014 [illegible], India, Tel: (0674) 2432177, Fax: (0674) [illegible], e.mail:[illegible].in
website:www.orissa-tourism.com, Tourist Offices at; **Chennai:** [illegible] Tourism Complex
Ground Floor, Near Kalaivanar Arangam, , Wallajah Road, Ch[illegible] - 600002
Ph: (044) 25360891, **Kolkata**: Utkal Bhawan 55, Lenin Sarani
Pin-700013, Tel: (033) 22443653, **New Delhi:** Utkalika, B/4 Baba Kharak Singh Marg
Pin - 110001, Telefax (011) 23364580

## தமிழக நாட்டுப்புறக் கதை

# உழைத்துக் கொடு



பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழகத்தை ஆண்ட மன்னன் கொடை வள்ளல் என்ற பெயர் பெற்றிருந்தான். அவனிடம் யார் போய் எதைக் கேட்டாலும் அவன் அதைக் கொடுத்து வரவே அவன் புகழ் எங்கும் பரவி இருந்தது. பண்டிதர்கள் பாமரர்கள் என்று பாரபட்சம் காட்டாமல் பணம், பண்டம், நவரத்தினம், தானியம், என்று அவன் கொடுத்து வந்தது அவனை யாவர் பார்வையிலும் மிகவும் உயர்த்தி விட்டது.

ஒருமுறை மன்னன் தன் பிறந்த நாளின் போது மக்களுக்குப் பரி களைக் கொடுத்துக் கொண்டிருந் தான். பரிசு பெற்றுக் கொள்ள ப ள் நீண்ட வரிசையில் நின்று பரிசுகளை வாங்கிக் கொண்டு சென்று கொண்டி ருந்தார்கள். மக்கள் கூட்டம் குறைந்து கொண்டே போயிற்று. கடைசியில் ஒரே ஒரு அந்தணர் மட்டும் பொறுமையாக வெகு நேரமாக நின்று கொண்டிருப்பதை மன்னன் கவனித்தான். அவன் அவரிடம் ''பண்டிதரே! ஏன் அசையாமல் நின்று கொண்டிருக்கிறீர்கள்? வாருங்கள். உங்களுக்கு என்ன வேண்டுமோ தயங்காமல் கேளுங்கள். அதைக் கொடுக்கிறேன்'' என்றான்.

அந்த அந்தணரும் ''அரசே! எனக்குப் பொன்னும் வேண்டாம். மணியோ முத்தோ மானியமோ எதுவும் வேண்டாம். ஆனால் நீங் களாக நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துச்சம்பாதித்து வாங்கிய பொருள் ஏதாவது உங்களிடம் இருந்தால் அதைக் கொடுங்கள். மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொள் கிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட மன்னன் திகைத்துப் போனான். அந்தணர் கூறியது அவன் மனதில் சுருக்கென்று தைத்தது. ஆம். அவன் தன் பொருள் என்று எதை எல்லாம் எண்ணி னானோ அவை தான் உழைத்துச் சம்பாதித்தவை அல்ல என்பதை அறிந்து கொண்டான். ஆம் அவை யாவும் மக்கள் கொடுத்தவரிப் பணத்தில் வாங்கப் பட்ட பொருள்

களே! இதை உணர்ந்த அவன் அந்த அந்தணரிடம் ''பண்டிதரே! நானாக உழைத்துச் சம்பாதித்தது என்று எதுவும் இப்போது என்னிடம் இல்லை. என்னிடம் இப்போது உள்ளவற்றில் நீங்கள் எதை வேண்டுமானாலும் கேளுங்கள். கொடுக்கிறேன்'' என்று சற்று நாணிக் குறுகிக் கூறினான்.

அந்தணரே ''அரசே! இப்போது உங்களிடம் உள்ள எதையும் நான் கேட்க மாட்டேன். எனவே நீங்கள் உழைத்து சம்பாதித்தது எதுவானாலும் ஏற்றுக் கொள்வேன். மற்றவை எவ்வளவு விலை உயர்ந்தனவாக இருந்தாலும் அவை எனக்கு



வேண்டவே வேண்டாமே'' என்று உறுதி படக் கூறினார். அப்போது மன்னன் ''பண்டிதரே! நீங்கள் தயவு செய்து நாளைக்கு வந்தால் நீங்கள் கேட்டபடியே பொருளைக் கொடுக்கிறேன்'' என்றான். அந்தணரும் மன்னனை வணங்கி விட்டு சிரித்தவாறே சென்றார்.

மன்னனுக்கு அந்தணர் கூறியதன் பொருள் விளங்கி விட்டது. மன்னனுக்கு மக்களிடமிருந்து கிடைப்பதெல்லாம் அவர்கள் உழைத்துச் சம்பாதித்துக் கொடுத்த பணமே என்றும் அவன் அதைத் தன் பணமாகக் கருதி செலவு செய்வது சரி அல்ல என்றும் உணர்ந்தான். அதனால் அவர் கூறியபடி அந்தணருக்கு ஒன்றை கொடுக்க வேண்டும் என்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.

மன்னன் தன் பட்டாடைகளைக் களைந்து விட்டு சாதாரணக் கூலியாள் போல ஆடைகளை அணிந்து கொண்டு அரண்மனையை விட்டு வெளியே நடந்து சென்றான். அவன் தான் செய்யக் கூடிய வேலை ஏதாவது கிடைக்குமா என்று அலைந்து பார்த்தான். ஆனால் ஒரு வேலை கூடக்கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு மீனவர் குப்பத்திற்குப் போய் பல மீனவர்களிடம் தனக்கு வேலை கொடுக்கும்படிக் கேட்டான். அநேகமாக எல்லோருமே வேலை இல்லை என்றே சொல்லி விட்டார்கள். ஆனால் ஒருவன் மட்டும் அவனது நிலையைக் கண்டு பரிதாபப் பட்டு

''நான் உனக்கு வேலை கொடுக்கிறேன். நீ வலை வீசி மீன் பிடித்துக் கொண்டு வரவேண்டும். நீ கொண்டு வருவனவற்றில் பெரிய மீன்களாக இருந்தால் ஒரு மீனிற்கு ஒரு செப்புக் காசு வீதம் கொடுப்பேன். சிறிய மீனாக இருந்தால் ஒரு மீனிற்கு ஒரு சோழி வீதம் தான் கொடுப்பேன்'' என்று கூறி மீன் பிடிக்கும் வலையை அவனிடம் கொடுத்தான்.

அவனும் வலையை வாங்கிக் கொண்டு கடலுக்குப் போய் வலையை விரித்துப் போட்டான். அதில் ஒரு பெரிய மீனும் ஒரு சிறிய மீனும் சிக்கின. அவனும் கிடைத்தது போதும் என்று திருப்தி அடைந்து அந்த மீன்களைக் கொண்டு போய் மீனவனிடம் கொடுக்கவே, மீனவனும் ஒரு செப்புக்காசையும் ஒரு சோழியையும் கொடுத்தான். அவனும் அதை வாங்கிக் கொண்டு அரண்மனைக்குச் சென்றான்.

மறுநாள் மன்னன் தர்பாருக்கு வந்தபோது அங்கே அந்தணர் நின்று கொண்டிருப்பதைக் கண்டான். அவன் அவரைத் தன்னருகே அழைத்து ''பண்டிதரே! நேற்றிரவு நான் வேலை செய்து ஒரு செப்புக்காசும் ஒரு சோழியும் சம்பாதித்தேன். அவற்றை உங்களுக்கு தானமாகக் கொடுக்கிறேன். பெற்றுக் கொள்ளுங்கள்'' என்றான்.

அந்தணரும் மகிழ்ச்சியுடன் அவற்றை வாங்கிக் கொண்டு ''இவை போன்ற பொருள்களைத் தான் விரும்புவது'' எனக்கூறி மன்னனை



வணங்கிவிட்டுத் தன் வீட்டிற்குச் சென்றார். அங்கு அவரது மனைவி மன்னனைக் காணச் சென்ற தன் கணவன் விலையுயர்ந்த பொருள்களை சன்மானமாகப் பெற்று எடுத்துக் கொண்டு வருவார் என்று எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தாள். அவர் வந்ததும் ஆவலுடன் அவள் ''சன்மானம் கிடைத்ததா? அவை என்ன? யாராவது அவற்றைக் கொண்டு வந்து கொண்டிருக்கிறார்களா?'' என்று ஆவலுடன் கேட்டாள்.

அவரும் ''மன்னர் விலையே மதிக்க முடியாத பொருள்களை சன்மானமாகக் கொடுத்திருக்கிறார்'' என்று சிரித்துக் கொண்டே கூறி தாம் பெற்ற ஒரு செப்புக் காசையும் ஒரு

சோழியையும் அவளிடம் கொடுத்தார். அவற்றை வாங்கிப் பார்த்த அவள் ஏமாற்றமும் ஆத்திரமும் அடைந்து ''பூ இவ்வளவு தானா உங்களுக்குக் கிடைத்த சன்மானம்? இவற்றைப் பெற்றுக் கொள்ளத்தான் இரண்டு நாட்களாக அரண்மனைக்குப் போய் மன்னரைப் பார்த்தீர்களா?'' என்று அழாத குறையாகக் கேட்டாள்.

அந்தணரோ! ''இவை மன்னரே உழைத்துச் சம்பாதித்தவை. இவற்றை எனக்குக் கொடுத்தது மிகமிக விலையுயர்ந்த பொருள்களைக் கொடுத்ததற்குச் சமம். இவை வேறு யாருக்குமே கிடைக்காதே'' என்றார். அதைக் கேட்ட அவரது மனைவிக்குக் கோபமே வந்து விட்டது. அவற்றைத் தூக்கித் தன் வீட்டு வாசலில் எறிந்து அவள் ''ஒரு செப்புக் காசும் ஒரு சோழியும் விலையுயர்ந்த பொருள்களா? யாருக்கு வேண்டும் அவை?'' என்று கூவினாள். அந்தணர் வீண் சண்டை எதற்கு என்று எதுவும் பேசவில்லை.

அன்றைய வேலைகளை இருவரும் செய்து விட்டு இரவானதும் படுத்துத் தூங்கினார்கள். மறுநாள் காலையில் அவர்கள் எழுந்து வாசலைப் பார்த்த போது அங்கு இரண்டு மரங்கள் முளைத்து உயர்ந்து நிற்பதைக் கண்டார்கள். ஒரு மரத்தில் தங்கக் காசுகளாகத் தொங்கிக் கொண்டிருந்தன. மற்ற மரத்தில் வெள்ளிச் சோழிகளாக இருந்தன. அவற்றைக் கண்டு இருவரும் ஆச்சரியப்பட்டு தங்க நாணயங்களையும் வெள்ளிச் சோழிகளையும் பறித்து எடுத்தார்கள். அந்தணர் தம் மனைவியிடம் ''பார்த்தாயா! நான் சொன்னது சரிதானே! செப்புக்காசும் சோழியும் மரங்களாக முளைத்தன தங்கக் காசுகளையும் வெள்ளிச் சோழிகளையும் கொடுத்திருக்கின்றன. அவை விலையுயர்ந்த பொருள்கள் தாமே?'' என்று கேட்டாள்.

அவரது மனைவியும் ''ஆம். விலையுயர்ந்தவையே. அப்போது அவற்றின் மதிப்பு எனக்குத் தெரியவில்லை தான் எதையும் உழைத்துச் சம்பாதித்தாலே அதற்கு மதிப்பே அதிகம் தான்'' என்றாள். அந்தணர் அவற்றை விற்றுப் பணமாக்கி சுகமாக வாழ்ந்து வந்தார்.





# அவசரம் யாருக்கா!

விந்தன் தன் தந்தை விட்டுச் சென்ற வியாபாரத்தை நன்கு நடத்தி வந்தான். அதைக் கண்டு அவனது தாயார் அலமேலு பூரித்துப் போனாள். ஒருநாள் விந்தன் மதிய உணவு உண்டு கொண்டிருக்கையில் அவள் தன் மகனிடம் ''உன் ஒன்று விட்ட மாமா முருகையன் த ன் ம கள் ம லர்க் கொடியுடன் பொ ங்கல் ப ண்டி கைக்கு இங்கு வரப் போகிறார்'' என்றாள்.

அதைக் கேட்ட விந்தன் ஆச்சரியத் துடன் ''யார் இந்த மாமா? இது வரை அவரை நான் பார்த்ததே இல்லையே'' என்று கேட்டான். அலமேலுவும் ''அவன் என் சிற்றப்பாவின் மகன். ஒரு காலத்தில் இதே ஊரில் இருந்த நாங்கள் ஒரே வயிற்று அண்ணன் தங்கை போலப் பழகி வந்தோம். முருகையன் வேலையின் பொரு ட்டு வட இந்தியாவிற்குச் சென்று விட்டான். இப்போது அவன் தன் உறவினர்களைக் காண இப்பகுதிக்கு வருகிறான்'' என்றாள். விந்தனும் ''அப்படியா? தாராளமாக வரட்டும். நானும் அவரைப் பார்த்தது போலவும் இருக்கட்டும்'' என்றான். அப்போது அலமேலு ''அவன் தன் மகளோடு வருகிறான் என்றால் தன் மகளை உனக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்று அவன் நினைக் கிறான் போலிருக்கிறது'' என்றாள்.

அது கேட்டு விந்தன் ''அதனால் என்ன? அவர் நினைத்து விட்டால் மட்டும் கல்யாணம் நடந்து விடுமா?'' என்றான். அலமேலுவும் ''அதற்காகத் தான் உன்னை எச்சரிக்கிறேன். அந்த முருகையனின் மனைவி மகா வாயாடியாம். பத்திரகாளியாம். தாயைப் போல மகளும் இருக்கத் தானே செய்வாள். அதனால் முருகைய் யன் இது பற்றிக் கேட்டால் அவசரப் பட்டு சம்மதம் தெரிவித்து விடாதே'' என்று கூறினாள்.

பொங்கல் பண்டிகை வந்தது. முருகையனும் மலர்க் கொடியும்

- விளிலிடீ சிவவி -



விந்தனின் வீட்டிற்கு வந்து விட்டார்கள். மலர்க் கொடியைப் பார்த்த அலமேலு தன் மனதில் ''பெண் பார்க்க லட்சணமாகவே இருக்கிறாள். ஆனால் குணம் எப்படியோ?'' என்று எண்ணினாள். அப்போது மலர்க் கொடியே அவளிடம் வந்து ''அத்தை! எப்படி இருக்கிறீர்கள்? உங்களை இப்போது தான் முதல் தடவையாகப் பார்க்கிறேன்'' என்றாள். அலமேலுவும் ''வா அம்மா! நானும் உன்னை இப்போது தான் பார்க்கிறேன். சௌக்கியமாகத் தானே இருக்கிறாய்?'' என்று நலம் விசாரித்தாள்.

இரவில் விந்தன் வந்து சாப்பிட்ட பின் அலமேலு ''மலர்க் கொடியைப் பார்த்தாயா? லட்சணமாக இருக்கிறாள். உனக்கு அவளை மண முடித்து வைக்கலாம் என்று நினைக்கிறேன். முருகைய்யனாக திருமணப் பேச்சு எடுப்பானா என்று தான் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள். அப்போது விந்தன் ''அம்மா! அவசரப்படாதே. அவர்கள் மனதில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்களோ? எதற்கும் ஒரு வாரம் பொறுத்துப் பார்க்கலாம்'' என்றான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. அப்போது அலமேலு விந்தனிடம் ''மலர்க்கொடியை எனக்குப் பிடித்துப் போயிற்று. வீட்டு வேலைகளை எல்லாம் நன்றாகச் செய்கிறாள். ஆனால் முருகைய்யன் இது வரை திருமணம் பற்றிய பேச்சையே ஏன் எடுக்கவில்லை என்று தான் ஆச்சரியப் படுகிறேன்'' என்றாள். விந்தனும் ''அம்மா! அவசரப் படாதே. அவர்கள் இன்னும் சில நாட்கள் இருக்கத்தானே போகிறார்கள். நாமாக வலியப் போய் பெண் கேட்பது நம்மை நாமே தாழ்த்திக் கொள்வது போலாகிவிடும் என்றான்.

விந்தனும் தன் அறைக்குப் போகத் திரும்பிய போது அத்தான் என்ற குரல் கேட்டு நின்றான். அப்படிக் கூப்பிட்டது மலர்க் கொடி தான். அவள் சிரித்தவாறே ''நீங்களும் அத்தையும் பேசியதைக் கேட்டுக் கொண்டு தான் இருந்தேன்.'' எனவே விந்தனும் ''அம்மாவுக்கு எதிலுமே அவசரம் தான்.'' என்றான் அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டே. ஆனால் மலர்க் கொடியோ ''அத்தையின் மனம் என்ன எண்ணுகிறது என்பது எனக்குத் தெரிந்து விட்டது. தனக்கு வரப்

போகும் மருமகள் எப்படி இருப்பாள் என்று ஒரு பெண்மணி பார்ப்பது இயல்பே. நல்ல பெண்ணாகப் பார்த்து விட்டால் அந்தப் பெண் ணையே தன் மருமகளாக்கிக் கொள்ள அவள் அவசரப் படுவதும் இயல்பே'' என்றாள்.

விந்தன் அதைக் கேட்டு ஆச்சரியத் தோடு அவளைப் பார்த்தவாறே நின்றான். அப்போது அவள் ''ஒரு வரைப் புரிந்து கொள்ள அவரது மனதைத் தெரிந்து கொள்வது அவசி யம். அது தெரியாவிட்டால் எந்த முயற்சியும் தக்க பயனை அளிக்காது போய் விடும். எனவே எதையும் நன்கு ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருவதே புத்திசாலித்தனமாகும். என் அம்மா என் தந்தைக்கு உறுதுணை யாக இருந்து சிக்கனமாகக் கட்டுப் பாட்டுடன் இருந்து குடித்தனம் செய்து வந்ததால் தான் என் தந்தையால் பணம் சேர்த்து வைக்க முடிந்தது. அதற்காக என் அம்மா பலரது ஏச்சுகளுக்கு ஆளானாலும் அவள் அது பற்றிக் கவலைப் படாமல் தன் போக்கிலேயே நடந்து வந்தாள். அதனால் தான் எங்கள் குடும்பம் சுகமாக உள்ளது. என் அம்மாவைப் பற்றி உங்கள் தாயார் தப்பும் தவறுமாகக் கேள்விப் பட்டிருப் பாரோ என்று எண்ணியே என் தந்தை என் திருமணம் பற்றி உங்கள் தாயாரிடம் பேசத் தயங்கிக் கொண்டி ருக்கிறார்'' என்றாள்.

அப்போது விந்தன் ''என் அம்மா அவசரம் காட்டக் கூடாது என்று நான் சொன்னதில் நான் தான் அவசரப் பட்டு விட்டேன். ஆனால் இனிமேல் தாமதிக்காமல் அவசரப் பட்டே ஆக வேண்டும் என்று நினைக்கிறேன்'' என்றான் சிரித்தவாறே. மலர்க் கொடியும் ஆச்சரியத்துடன் ''எதற்கு அவசரப் படப் போகிறீர்கள்?'' என்று கேட்டாள். விந்தனும் புன்னகை புரிந்தவாறே ''எதற்கா? நம் திருமணத் திற்குத்தான். என் அம்மாவையும் உன் தந்தையையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்த நான் அவசரப் பட்டே ஆக வேண்டும். இப்போது தெரிந்ததா அவசரம் யாருக்கு என்று?'' எனக் கூறினான்.

மலர்க் கொடி நாணி நின்றாள்.





# தங்கக் கிண்ணம்

வெகு காலத்திற்கு முன் போதி சத்வர் ஒரு நாட்டில் பழைய பாத்திர வியாபாரம் செய்து வந்தார். பழைய பாத்திரங்களை நியாயமான விலைக்கு வாங்கிக் கொண்டு அதற்கான விலையையோ அல்லது வேறு புதுப் பாத்திரங்களையோ அவர் கொடுப்பார். அவரைப் போலவே அவ்வூரில் பேராசை பிடித்த மற்றொரு பழைய பாத்திர வியாபாரியும் இருந்தான். அவன் மோசடி வியாபாரம் செய்து வந்தான்.

ஒரு முறை தலைநகரிலிருந்து வேறொரு நகருக்கு அவர்கள் இருவரும் போனார்கள். அந்நகருக்கு முன் உள்ள ஆற்றைப் படகில் ஏறிக் கடந்து சென்று நகரை அடைந்தார்கள். இருவரும் தம் வியாபாரத்தை அந்த ஊரில் தொடங்கினார்கள்.

அந்த ஊரில் ஒரு பணக்காரக் குடும்பம் மிகவும் நொடித்துப் போய் ஏழையாகி துன்பப்பட்டுக் கொண்டிருந்தது. அக்குடும்பத் தலைவி வீட்டிலுள்ள பாத்திரங்களை அவ்வப்போது விற்று குடும்பத்தைக் காப்பாற்றி வந்தாள். அந்த வீட்டிலிருந்த எல்லாப் பாத்திரங்களும் இவ்வாறு போய் விட்டன. ஒரே ஒரு பாத்திரம் தான் மிஞ்சி இருந்தது. அது பாசி பிடித்துக் கருப்பாகி இருந்தது. உண்மையில் அது தங்கக் கிண்ணம். வெகு நாட்களாக உபயோகப் படுத்தாததால் அழுக்கேறி நிறம்மாறி இருந்தது.

தெருவில் 'பழைய பாத்திரம் வாங்குகிறேன்' என்ற குரல் கேட்டு அந்த வீட்டுத் தலைவி பாத்திரக் காரனை அழைத்தாள். அப்படி வந்தவன் பேராசை பிடித்த பாத்திரக் காரன். அவனிடம் அக்குடும்பத் தலைவி அந்தப் பழைய பாத்திரத்தைக் காட்டவே அவன் அதை வாங்கிப் பார்த்தான். அது தங்கத்தால் ஆனது என்று அவனுக்குத் தெரிந்து

விட்டது. ஆனால் வீட்டுத் தலைவிக்கு அது தெரியவில்லை எனக் கண்டு அவன் அவளை ஏமாற்றத் திட்டம் போட்டான்.

எனவே அவன் அப்பாத்திரத்தை தூர விட்டெறிந்து ''இதை யார் வாங்குவார்கள்? இதற்கு பத்துக் காசுதான் தருவேன்'' என்று ஒரே யடியாக அடாவடி செய்தான். வீட்டுத் தலைவியோ ''என்னப்பா ஒரு வெள்ளிக் காசாவது கொடு'' என்று கெஞ்சினாள். அவனோ பிகு செய்து கொண்டு 'முடியாது' எனக் கூறி விட்டு எழுந்து போய் விட்டான்.

அந்தப் பேராசைக்காரன் போனவுடன் போதிசத்வர் குரல் கொடுத்தவாறே வந்தார். அப்போது அந்த இல்லத்தலைவி ''சரி, இவனிடமாவது இந்தப் பாத்திரத்தைக் கொடுத்து ஒரு வெள்ளிக் காசு வாங்கி இன்றையப் பொழுதை ஓட்டலாம்'' என எண்ணி அவனை வீட்டினுள் கூப்பிட்டு அந்தக் கிண்ணத்தைக் காட்டினாள்.

போதிசத்வர் அதைப் பார்த்து விட்டு அது தங்கக் கிண்ணம் எனக் கண்டு ''அம்மா, இது விலை உயர்ந்த தங்கக் கிண்ணம். இதனை நான் எடுத்துக் கொண்டு விலை கொடுக்கிறேன். இது ஆயிரம் வெள்ளிக் காசுகள் பெறும். என்னிடம் ஐநூறு வெள்ளிக்காசுகளும் சில வெள்ளிப் பாத்திரங்களும் உள்ளன. அவற்றைக் கொடுக்கிறேன். எனக்கு ஊர் திரும்ப ஐந்து வெள்ளிக் காசுகளை வைத்துக் கொண்டு மீதம் கொடுக்கிறேன்'' என்றார்.

வீட்டுத் தலைவியும் ''அப்படியா! இது இவ்வளவு விலை பெறுமா? சற்று முன் வந்த ஒருவன் இது ஐந்து



காசு கூடப் பெறாது எனத் தூக்கி எறிந்தானே. அவன் என்னை ஏமாற்றப் பார்த்தான் போலிருக்கிறது'' எனக் கூறினாள். போதிசத்வரும் பணத்தையும் வெள்ளிப் பாத்திரங்களையும் கொடுத்து விட்டு அந்தத் தங்கக் கிண்ணத்தை வாங்கிக் கொண்டு ஆற்றின் கரைக்குப் போய் படகில் ஏறினார். படகும் அங்கிருந்து செல்லலாயிற்று.

போதிசத்வர் போன சற்று நேரத்திற்கெல்லாம் அந்தப் பேராசை பிடித்த வியாபாரி அந்த வீட்டிற்கு வந்து ''கொடு அம்மா அந்த பாத்திரத்தை. போனால் போகிறது என்று நீ கேட்டபடியே ஒரு வெள்ளிக் காசைக் கொடுக்கிறேன்'' என்றான்.

வீட்டுத் தலைவியோ ''ஏய் மோசக்காரா! என்னை ஏமாற்றி ஆயிரம் வெள்ளிக் காசுகள் விலை பெறும் தங்கக் கிண்ணியை ஒரு வெள்ளிக் காசுக்கா வாங்கிக் கொண்டு போகப் பார்க்கிறாய்? போ போ. வேறொரு வியாபாரி எனக்கு அதற்கு உரிய நியாயமான விலையைக் கொடுத்து விட்டு பாத்திரத்தை வாங்கிக் கொண்டு போய் விட்டார்'' எனக் கூறி படாரென்று கதவைச் சாத்திக் கொண்டு போய் விட்டாள்.

அடடா! ஒரு வெள்ளிக் காசு கொடுத்து ஆயிரம் வெள்ளிக்காசுகள் பெறுமான பாத்திரத்தைத் தட்டிக் கொண்டு போக நினைத்ததை இந்த போதிசத்வர் வந்து கெடுத்து விட்டாரே என்று அந்தப் பேராசைக் கார வியாபாரி ஆத்திரம் கொண்டான். அவன் வேக வேகமாக ஆற்றின் படகுத் துறைக்கு ஓடினான்.

ஆனால் அப்போது போதிசத்வர் ஏறிச் சென்ற படகு ஆற்றில் பாதி தூரத்திற்கு மேல் சென்று விட்டது.

அதைக் கண்ட பேராசைக்காரனின் ரத்தம் கொதித்தது. கொழுத்த லாபம் வர இருந்தது போதிசத்வரால் கையை விட்டுப் போய் விட்டதே என எண்ண எண்ண அவன் நெஞ்சம் விம்மியது. ரத்த ஓட்டம் அதிகரிக்க அவன் இதயம் வெடித்துக் கீழே விழுந்து இறந்தான். போதிசத்வரின் நேர்மையால் ஏமாற இருந்த ஒரு குடும்பம் நிறையப் பணம் பெற்று நன்கு வாழ வழி ஏற்பட்டது.





# மகாவிஷ்ணு

சூதர் நாரதரைப் பற்றிக் கூறலானார். ''முன் பிறப்பில் நாரதர் ஒரு வேலைக்காரியின் மகளாகப் பிறந்தார். அவளோ ஒரு பக்தரின் வீட்டில் வேலை செய்து வந்தாள். அந்த வீட்டிற்கு எப்போதும் முனிவர்களும் வித்வான்களும் வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

நாரதரின் தாயை ஒரு நாள் பாம்பு கடிக்கவே அவள் இறந்து விட்டாள். அவருக்குத் தன் தந்தை யாரென்று தெரியாது. அவரது நண்பர்களான மற்ற சிறுவர்களோ வேலைக்காரியின் மகன் என்று கூறி கேலி செய்து வந்தார்கள்.

கொஞ்ச காலத்திற்குப் பின் அந்த பக்தரும் இறந்து விடவே நாரதருக்குப் புகலிடம் இல்லாது போயிற்று. அவர் வீடு வீடாகச் சென்ற போது அவரை எல்லோரும் அண்ட விடாமல் துரத்தி விட்டார்கள். நாரதர் அவர்கள் ஏசியதையெல்லாம் பொறுமையுடன் சகித்துக் கொண்டார்.

''நான் மனிதனாகப் பிறந்து இப்படிக் கஷ்டப்படுவதை விட ஏதாவது மிருகமாகப் பிறந்து காட்டில் திரிந்து கொண்டிருந்தால் எவ்வளவு மேலாக இருக்கும்?'' என நாரதர் எண்ணிக் காட்டிற்குப் போனார்.

அவருக்கு முனிவர்களும் பண்டிதர்களும் கூறியவை எல்லாம் நினைவிற்கு வந்தது. அப்போது அவர் மனதில்தான் ஏன் தவம் செய்து தேவர்களில் ஒருவராக ஆகக் கூடாது என்ற எண்ணம் தோன்றியது. அவர் உடனேயே ஓரிடத்தில் அமர்ந்து தவம் செய்ய ஆரம்பித்தார்.



''திக்கற்றவருக்கு தெய்வமே துணை. எனவே அவர்தான் என்னை உய்விக்க வேண்டும்'' என்று எண்ணி வெகு காலம் அவர் தவம் செய்தார். தவத்தால் அவரது உடலில் புதிய பொலிவு ஏற்பட்டது. அவர் மீது ஒரு ஒளி விழுந்தது. அந்த உருவில் வந்தவர் மகாவிஷ்ணுவே. அவர் ''குழந்தாய் நாரதா! நீ என்னோடு ஐக்கியமாகி விடப் போகிறாய். நீ பிரம்மாவின் மானசீக புத்திரனாகப் பிறந்தாய். உன்னில் என் அம்சம் உள்ளது. நீ சிரஞ்சீவியாக முக்கால மும் அறியும் சக்தி பெற்று மூவுல கிலும் சுற்றி வந்து என் பெயரை எப்போதும் உச்சரித்துக் கொண்டே இருப்பாய்'' என்றார்.

நாரதர் விஷ்ணுவின் அம்சமாய் பிரம்மாவின் புதல்வராய் தேவலோக முனிவராகக் கருதப் படலானார். இப்பேர்ப்பட்ட நாரதர் தாம் துரு வனுக்கு நாராயண நாமத்தை உப தேசித்தவர்.

துருவன் காட்டை நோக்கிச் செல்வது கண்டு அவனது தம்பி உத்தமன் ஓடி வந்து காட்டிற்குப் போக வேண்டாம் என்று தடுத்தான். தன் தாயார் கூறியதைப் பொருட் படுத்தாமல் தன் மீது கோபம் கொள் ளாமல் அரண்மனைக்குத் திரும்பி வருமாறு அவன் வேண்டினான்.

அப்போது துருவன் ''தம்பீ! என்னை பெற்ற தாய் தானும் உயர்ந்த வள் என நினைக்க வேண்டாமா? அதற்காகவே தவம் செய்யச் செல்கி றேன்'' என்றான். உத்தமனும் ''அப்படியானால் நானும் உன்னோடு காட்டிற்கு வருகிறேன். நீ தவம் செய். உனக்கு நான் பணி விடைகள் செய்கிறேன்'' என்றான்.

துருவனோ ''இதனால் உன் தாயா ருக்கு எவ்வளவு துக்கம் ஏற்படும்? நான் உன் அண்ணன். நான் சொல் வதைக் கேள். நீ அரண்மனைக்குத் திரும்பிப் போ'' என்றான்.

அப்போது சுருசி அங்கு வந்து உத்தமனைத் தூக்க முயலவே அவன் ''அம்மா 'நீ என்னைத் தொடாதே. உன்னால் தான் என் அண்ணன் என்னை விட்டுப் பிரிந்து காட்டிற்குப் போகிறான்.'' என்று வெறுப்புடன் கூறினான்.

சுருசி வெட்கித் தலை குனிந்து கொண்டு ''ஆமாம்! பாவி நான் சொன்ன கடுஞ்சொல்லை மறந்து விடு துருவா! திரும்பிவா! நீயே அரசரின் மடியிலும் சிம்மாசனத்

திலும் அமர்ந்து கொள்'' என்று கூறினாள்.

துருவனோ அதை ஏற்காமல் காட்டிற்குச் சென்று விட்டான். நாரதர் சுநீதியைக் கண்டு ''அம்மா! உன் மகன் எவ்வளவு உயர்ந்தவன்! அவனைப் பற்றிக் கவலைப் படாதே. பகவான் நாராயணன் அவனைப் பார்த்துக் கொள்வார்.'' என்று கூறினார். பிறகு உத்தானபாதனிடம் அவர் ''மன்னா! இப்போது நீ வருத்தப்படாமல் சந்தோஷப்பட வேண்டும். உன் தந்தையும் துருவனின் பாட்டனாருமான சுவயம்புவமனுவின் வம்சத்திற்கு துருவன் அழியாப் புகழைத் தேடித்தரப் போகிறான். இதில் யாருடைய தவறும் இல்லை. எல்லாம் அந்த நாராயணனின் சித்தப்படித்தான் நடக்கிறது'' என்று கூறிச் சமாதானப் படுத்தினார்.

துருவன் யமுனை நதிக்கரையில் மதுவனத்தில் அமர்ந்து நாராயண நாமத்தை உச்சரித்தவாறே தவம் செய்யலானான். கொடிய மிருகங்கள் அவனுக்குத் தீங்கு இழைக்கவில்லை. துருவனின் தவத்தால் மூன்று உலகங்களுமே கிடுகிடுத்தன.

யார் கடுந்தவம் செய்தாலும் அதனால் தன் பதவி பறி போய் விடுமோ என பயப்படுபவன் இந்திரன். துருவனின் தவத்தால் அவன் பயம் கொண்டு அவனது தவத்தைக் கலைக்க என்னென்னவோ செய்து பார்த்தான்.

அப்போது நாரதர் இந்திரனிடம் ''இந்திரா! துருவன் சாமானியச் சிறுவன் அல்ல. அவனை நீ ஒன்றும் செய்ய முடியாது. நீ ஏன் வீணாக பயப்படுகிறாய்? அவன் இந்திரப் பதவியை தூசிக்குச் சமமாக எண்ணுபவன்'' என்றார். இந்திரனும் எதுவும் செய்யாமல் இருந்தான்.



துருவனின் தவத்திற்கு மகிழ்ந்து போய் மகாவிஷ்ணு அவன் முன் தோன்றினார். துருவன் அவரது பாதங்களில் வீழ்ந்து அவரை தரிசித்து ஆனந்தம் அடைந்தான்.

மகாவிஷ்ணு தம் சங்கால் துருவனைத் தொட்டார். அவன் அப்போது வாய்திறந்து விஷ்ணுவின் புகழ்பாடினான். அது கேட்டு அவர் புன்னகை புரிந்து ''துருவா! உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

அவனும் ''பரந்தாமா! உங்கள் சுந்தரவதனத்தை எப்போதுமே பார்த்துக் கொண்டு ஆனந்தம் அடையவே நான் விரும்புகிறேன். எனக்கு



வேறு எந்த ஆசையும் இல்லை'' என்றான்.

விஷ்ணுவும் ''அப்படியே ஆகட்டும். நீ இப்போது உன் நாட்டிற்குப் போ. பிறகு நீதி வழுவாமல் ஆட்சி புரி. அதன் பிறகு என் உருவாய் உலகின் சிரம்போலுள்ள துருவ பதத்தை நீ அடைவாய். எந்தப் பிரளயம் ஏற்பட்டாலும் எது அழிந்தாலும் நீ மட்டும் அழியாமல் அசையாமல் ஒரே நிலையில் இருந்து வருவாய்'' என்று வரம் அளித்து விட்டு மறைந்தார்.

துருவனும் தன் ஊரான மாகிஷ்மதி நகருக்கு வந்தான். உத்தானபாதன் துருவனை வரவேற்று அவனிடம் நாட்டை ஒப்படைத்து விட்டுத் தவம் செய்யக் காட்டிற்குப் போய் விட்டான். துருவனும் நன்கு ஆட்சி புரிந்தான்.

உத்தமன் இன்னமும் மணம் புரிந்து கொள்ளவில்லை. துருவனுக்குத் துணையாக இருந்து மக்களைத் துன்புறுத்தும் காட்டு மிருகங்களை வேட்டையாடலானான். அவன் அதற்காக இமயமலைப் பகுதியை அடைந்த போது அங்கிருந்த யட்சர்கள் சிலர் அவனைத் தாக்கிக் கொன்று விட்டார்கள். அது கேட்டு சுருசி மனம் உடைந்து காட்டிற்குப் போய் காட்டுத் தீயிலே கருகி மாண்டாள்.

துருவன் யட்சர்களை அழிக்க அவர்களது நகரான அலகாபுரியை முற்றுகை இட்டான். யட்சர்கள் தம் மாயாஜாலவித்தைகளை எல்லாம் காட்டினர். ஆனால் துருவன் நாராயணாஸ்திரம் எய்து அவர்களை வென்றான். குபேரனும் துருவனோடு சமாதானம் செய்து கொண்டு பல விலையுயர்ந்த பொருள்களைக் காணிக்கையாய் சமர்ப்பித்து மரியாதைகள் செய்து அனுப்பி வைத்தான்.

துருவனுக்குப் பல புதல்வர்கள் பிறந்தனர். துருவனும் நன்கு ஆண்டு சுவயம்புவமனு வம்சத்திற்குப் பெயரும் புகழும் கிடைக்கச் செய்தான். நீண்ட காலம் ஆண்டபின் துருவன் தன் மூத்த மகனுக்குப் பட்டம் கட்டி விட்டு பத்திரிகாவனத்திற்குச் சென்றான். அங்கு மகாவிஷ்ணுவை தியானித்தவாறே அவன் உயிர் நீத்தான். மகாவிஷ்ணுவின் கட்டளையின் பேரில் அவரது நான்கு தூதர்கள் விமானம் கொண்டு வந்தார்கள். அப்போது துருவன் ''என் தாயாருக்குக் கிடைக்

காத உயரியஸ்தானம் எனக்கு எதற்கு?'' என்றான்.

அப்போது அவர்கள் துருவ மண்டலம் நோக்கிச் செல்லும் ஒரு விமானத்தைச் சுட்டிக் காட்டினார்கள். அதில் தன் தாயார் சுநீதி அமர்ந்து செல்வதை துருவன் கண்டான். அப்போது துருவன் மகிழ்ச்சி அடைந்து அவர்கள் கொண்டு வந்த விமானத்தில் ஏறிக் கொண்டான்.

அந்த விமானம் கிரகமண்டலங்களையும் நட்சத்திரமண்டலங்களையும் சப்தரிஷி மண்டலத்தையும் தாண்டி துருவபதத்தை அடைந்தது. அதுதான் விஷ்ணுபதம். அவர் வசிக்கும் வைகுண்ட லோகமும் அங்குதான் உள்ளது. கோலோகமும் அங்குதான் இருந்தது. கோலோகத்திற்கு மேல் ஒரே இருள் சூழ்ந்து இருந்தது.

அந்த இருளுக்கும் அப்பால் தான் மகாவிஷ்ணு ஒளிமயமாய் இருந்தார். துருவனும் ஒளி வீசிப் பிரகாசித்து நிலையாக இருந்தான். அவனுக்கு கீழ் சப்தரிஷி மண்டலம் இருந்தது.

கோலோகத்திற்குக் கீழ் பிரம்மா வாழும் சத்திய லோகமும், ஜனலோகமும் மஹர்லோகம், சுவர் லோகம், புவர் லோகம், பூலோகம் என அடுத்து இருந்தன. பூலோகத்திற்குக் கீழ் ஏழுலோகங்களான அதலம், விதலம், சுதலம், ரசாதலம், தலாதலம், மஹாதலம், பாதாளம் என்ற லோகங்களும் இருந்தன. இப்படி



யாக மொத்தம் ஈரேழு பதினான்கு லோகங்களுக்கும் மேல் துருவன் இருந்து ஒளி விட்டுப் பிரகாசித்தான்.

பக்திசிரத்தையுடன் யார் தியானம் செய்தாலும் பகவான் அருள்வார் என்பதற்கு துருவனே ஓர் எடுத்துக் காட்டு. அவருக்குத் தம்மை தியானிப் பவன் வயதில் பெரியவன் அல்லது சிறியவன் என்ற பாகுபாடே கிடையாது.

சூதர் இவ்வாறு துருவனின் சரிதத்தைக் கூறி ''மீன் நீரில் மட்டும் வாழ்வது. ஆனால் ஆமையோ நீரிலும் நிலத்திலும் வாழக் கூடியது. உயிரினங்கள் நீரிலிருந்து வந்து நிலத்தில் வாழத் தொடங்கின. அப்படிப்பட்ட ஆமையாக மகா விஷ்ணு அவதரித்தார். இதனை தசாவ தாரங்களில் இரண்டாவது அவதார மான கூர்மாவதாரம் என்பர்.'' என்று சொல்லி மேலும் விவரிக்கலானார்.

தேவர்களும் அசுரர்களும் பால் கடலைக் கடைந்து அமிர்தத்தை அடைவது எனத் தீர்மானித்தனர். பலம் மிகுந்த ராட்சஸர்கள் அமிர்தம் கிடைத்ததும் அதனை முழுவதுமாகத் தாமே எடுத்துக் கொண்டு விடுவது எனவும் எண்ணினர். ராட்சஸர்கள் அமிர்தத்தை அடைந்து பருகி விட் டால் சாவே இல்லாமல் தம்மைத் துன்புறுத்துவார்களே எனக் கவலைப் பட்டுப் தேவர்கள் விஷ்ணுவிடம் போய் முறையிட்டார்கள்.

பால் கடலில் மந்தர மலையை மத்தாக நிறுத்தி வாசுகி என்னும் மாபெரும் பாம்பைக் கயிறாக்கிக் கடைந்து அமிர்தம் எடுக்கலாம் எனத் தீர்மானிக்கப் பட்டது மந்தர மலையை யார் கொண்டு வந்து பால் கடலில் போடுவது என யாவரும் திகைத்த போது மகா விஷ்ணுவே அதனைச் செய்தார்.

ராட்சஸர்கள் வாசுகியின் தலைப் பக்கத்தைப் பிடித்துக் கடைவதாகப் பிடிவாதமாகக் கூறவே மகாவிஷ்ணு தேவர்களிடம் அதனை அனுமதித்து பாம்பின் வால் பக்கத்தைப் பிடித்துக் கடையும் படிக் கூறினார்.

மந்தர மலையை வாசுகி சுற்றிக் கொள்ள பால் கடலைக் கடைய தேவர்களும் ராட்சஸர்களும் தயாரா னார்கள்.



அயல் நாட்டுக் கதைகள்

# யட்சிணிகளுடன் பேரம்

MAHE...

**வே**ல்ஸ் கடற்கரையில் மில்ஃபோர்ட்ஹேவன் என்ற சிற்றூரின் மக்கள் அமைதியாய் நிம்மதியுடன் வாழ்ந்து வந்தார்கள். இப்படி இருக்கையில் திடீரென சில திடுக்கிடும் நிகழ்ச்சிகள் அங்கு நடக்கவே அவ்வூரார் கதி கலங்கிப் போனார்கள். கடைகளில் வியாபாரிகளின் கண்ணெதிரிலேயே கடைப் பொருள்கள் மாயமாய் மறைந்தன. ஆனால் அவை இருந்த இடத்தில்தங்க நாணயங்கள் வைக்கப்பட்டிருந்தன.

ஒருநாள் க்ரிஃபித் என்ற கடைக்காரன் அன்றைய வியாபாரம் முடிந்ததும் அன்றையக் கணக்குகளை எல்லாம் எழுதிவிட்டு உட்கார்ந்திருந்தான். அப்போது அவன் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த ஒரு

பெரிய பூசணிக்காய் திடீரென மறைந்து போயிற்று. அதைக் கண்டு அவன் திகைக்கையில் அது இருந்த இடத்தில் சில தங்க நாணயங்கள் இருப்பதைக் கண்டு ஆச்சரியப் பட்டான். அதன் பக்கத்தில் தங்க குச்சி ஒன்றும் கிடந்தது. அவற்றை எடுத்துத் தன் சட்டைப்பைக்குள் போட்டுக் கொண்டான். அப்போது அவனுக்குப் பல அதிசயக் காட்சிகள் தென்பட்டன.

சில அதிசய உருவங்கள் கடையில் பல பொருள்களை எடுத்துக் கொண்டு தங்க நாணயங்களை வைப் பதையும் அவன் பார்த்தான். அப் போது தான் ஊரில் அதிசய நிகழ்ச்சி கள் நடப்பதற்கு அந்த விசித்திர உருவங்களே காரணம் என்பது அவனுக்கு விளங்கி விட்டது. அவன் வியாபாரி. அதனால் அவை எத்த கைய பொருள்களை விரும்பி



எடுக்கின்றன என்பதைப் புரிந்து கொண்டான். அதனால் அவை விரும்பும் பொருள்களையே அவன் தன் கடையில் வைத்தான். அந்த விசித்திர உருவங்களும் தினமும் அந்தக் கடைக்கு வந்து தமக்கு வேண்டியவற்றை எடுத்துக் கொண்டு தங்க நாணயங்களை வைத்து விட்டுச் சென்றன.

இவ்வாறு தங்க நாணயங்கள் தினமும் க்ரிஃபித்திற்குக் கிடைக் கவே அவன் விரைவிலேயே பெரும் பணக்காரனாகி விட்டான். ஒரு நாள் அவன் கடற்கரையில் நடந்து கொண்டிருக்கையில் தொலைவில் ஒரு தீவைக் கண்டான். தான் கண்ட அதிசய உருவங்கள் அந்தத் தீவை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதை அவன் பார்த்தான். அவன் மனதில் ''ஓகோ! இவையட்சிணிகள் போலி ருக்கிறது. நான் அந்தத் தீவிற்குப் போனால் பல விலை உயர்ந்த பொருள்களைக் காண முடியும். அவற்றை எடுத்து வந்து விற்று இன்னமும் பெரிய பணக்காரனாகி விடுவேன்.'' என எண்ணினான். அதனால் அவன் மறுநாளே அந்த யட்சிணிகளுக்குப் பிடிக்கும் பொருள்களைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு அவன் அந்தத் தீவை அடைந்தான்.

தம் தீவில் ஒரு மனிதன் வந்தது கண்டு யட்சிணிகள் திகைத்துப் போயின. அத்தீவிலிருந்த உயிரி னங்கள் எல்லாம் அவனைக் காண வந்து கூடின. அவற்றை எல்லாம்

கண்ட க்ரிஃபித் ஒரேயடியாக மகிழ்ந்து போய் ''உங்களுக்குப் பிடித்தமான பொருள்களாகக் கொண்டு வந்திருக்கிறேன். வாங்கிக் கொள்ளுங்கள்'' என்று கூறினான். யட்சிணிகளும் க்ரிஃபித் கொண்டு வந்த பொருள்களை வாங்கிக் கொண்டு சென்றன. க்ரிஃபித்தும் அத்தீவிலிருந்து புறப்பட்டுத் தன் ஊரை அடைந்தான்.

அவன் போன பின் யட்சிணிகளின் தலைவன் ''நாளை அவன் இங்கே வந்ததும் அவனுக்கு இந்தத்தீவு எப்படித் தென்பட்டது என்பதைக் கேட்டு அறிந்து கொள்ள வேண்டும். இவனைப் போல வேறு சில மனிதர்களுக்கும் இந்தத் தீவு தென் பட்டால் நாம் தொடர்ந்து இங்கே நிம்மதியாக வாழ முடியாது'' என்று யட்சிணிகளிடம் கூறினான். மறுநாள் க்ரிஃபித் தன் சரக்குகளுடன் அத் தீவிற்கு வந்ததும் ஒரு யட்சிணி சில பொருள்களை வாங்கிக் கொண்டு ''நீ கொண்டு வந்த பொருள்கள் மிக நன்றாக இருக்கின்றன. ஆனால் எந்த மனிதனாலும் காண முடியாத இந்தத் தீவு உனக்கு மட்டும் எப்படித் தென்பட்டது?'' என்று கேட்டது.

அப்போது அவன் உற்சாகமாக ''ஒரு நாள் என் கடைக்கு வந்த உங்களில் ஒரு யட்சிணி தங்கக் காசுகளுடன் ஒரு தங்கக்குச்சியையும் போட்டுவிட்டுப் போய் விட்டாள். அதை எடுத்து என் சட்டைப்பைக்குள் வைத்துக் கொண்டேன். அப்போது முதல் உங்களையும் பார்க்க



முடிந்தது. உங்கள் தீவையும் காண முடிந்தது'' என்றான். அப்போது அந்த யட்சிணி ''அப்படியா? எங்கே அந்தக் குச்சியை எடுத்துக் காட்டு பார்க்கலாம்'' என்றது.

அவனும் தன் சட்டைப்பையி லிருந்த அந்தத் தங்கக்குச்சியை எடுத்துக் காட்டினான். யட்சிணி அதைத் தன் கையில் வாங்கிக் கொண்டு பார்த்தவாறே ''ஓ! இது டெய்ஸியுடையது. அவள் வெகு நாட்களாக இதைத்தான் தேடிக் கொண்டிருக்கிறாள்'' என்று கூறி அதை அவனிடம் கொடுத்து விட்டாள்.

ஆனால் அந்த யட்சிணி அந்த விஷயத்தை மற்ற யட்சிணிகளிடம் கூறி ''அந்தத் தங்கக்குச்சியைத் தந்திரமாக வாங்கிவிடவேண்டும்'' என்றாள். அதற்கு ஒரு திட்டம்

தீட்டப் பட்டது. மறுநாள் க்ரிஃபித் அத்தீவிற்கு வந்தபோது முந்தைய தினம் அவனிடம் பேசிய யட்சிணி அவனிடம் இனிக்கப் பேசி ''என்னோடு வா. இந்தத் தீவை சுற்றிக் காட்டுகிறேன்'' என்றாள். அவனும் அவளோடு சென்றான். அத்தீவில் எங்கு பார்த்தாலும் வைரங்களும் மாணிக்கங்களும் மரகதங்களும் குவியல் குவியலாக இருந்தன. அவற்றைக் கண்டபின் அவன் தன் மனதில் ''இவை யாவும் என் வசமாகி விடவேண்டும்'' என்றே எண்ணினான்.

அதை ஊகித்து விட்ட யட்சிணி ''நீ விரும்பினால் இவற்றில் எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக் கொண்டு போகலாம். அதற்காக நீ எங்களுக்கு ஏதாவது ஒன்றைக் கொடுக்க வேண்டும்'' என்றான். க்ரிஃபித்தும் ''என்ன வேண்டும், சொல்'' எனவே யட்சிணி ''நேற்று நீ எனக்குக் காட்டினாயே. அந்தத் தங்கக் குச்சியை கொடுக்க வேண்டும்'' என்றாள்.

பல உயர்ந்த ரத்தினங்கள் கிடைக்கும் போது தங்கக் குச்சியைக் கொடுத்து விடலாம் என்று எண்ணி அவன் அதற்குச் சம்மதித்தான். அவள் அவனை அக்குவியல்கள் உள்ள இடங்களுக்குக் கூட்டிச் சென்றாள். அவனும் ஏராளமான நவரத்தினக் கற்களை எடுத்துத்தன் கப்பலில் நிரப்பிக் கொண்டான். பிறகு தங்கக்குச்சியை அந்த யட்சிணியிடம் கொடுத்து விட்டுக் கப்பலில் ஏறி அங்கிருந்து தன் ஊருக்குக் கிளம்பினான்.

அவன் கடலில் போகப்போக தான் எடுத்து வந்த நவரத்தினங்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே போவதை கவனித்தான் அவன் திரும்பிப் பார்த்தபோது அவனால் யட்சிணிகளையும் பார்க்க முடியவில்லை. அவர்களது தீவையும் காண முடியவில்லை. அப்போதுதான் தங்கக் குச்சி தன்னிடம் இல்லாது போனால் யட்சிணிகளையும் அவர்களது தீவையும் பார்க்க முடியாது என்பதை அவன் அறிந்து கொண்டான்.

கவலையோடு எதுவுமே இல்லாமல் கரை இறங்கி க்ரிஃபித் அதற்குப்பின் ஒரு யட்சிணியைக் கூடக் காண முடியாது போனான்!



சாந்திதேவன் இல்லாததால் சேனாதிபதி வீரசிம்மன் அரியாசனத்தில் அமர முயன்றான். அதற்குத் தடையாக இருந்த அமைச்சர் மகேந்திரரைத் கொல்ல முயன்றது நடக்க வில்லை. வசந்தன் என்ற இளைஞன் தன்னை எதிர்ப்பது கண்டு சேனாதிபதி அவனைத் தூக்கிலிடும் படிக் கட்டளை இட்டான். ஆனால் முகமூடி வீரன் அவனைக் காப்பாற்றித் தன்னோடு கொண்டு சென்றான். கொத்தவாலுக்கு எவ்விதத் தடையும் கிடைக்கவில்லை.

8

# சூர்யா

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா




கொத்தவால் சவுக்கைக் காட்டினான்.



அதன்பின் குழந்தைகளிடம் கேட்டான்.







கிராம மக்கள் தடுக்கவே கொத்தவால் அவர்களைச் சவுக்கால் அடித்தான்.









காட்டிலிருந்த ஜெயானந்த முனிவர் ஜெய நகர சிற்றரசனைக் காணச் சென்றார்.

எல்லாம் எரிந்து போனதும் உங்களுக்கு நிரந்திர நிம்மதி கிடைக்கும்

முனிவர் தம் வருகையைத் தெரிவிக்க கிளியை அனுப்பினார்.

மழையில் இருந்து தப்ப எங்கே ஒதுங்கலாம்?

பாகா! நீ இங்கேயே இரு.

மல்லி! நீ சுகதேவரிடம் செல்.

சிற்றரசன் சுகதேவன் கிளிவருவதை கவனித்தான்.

இது ஜெயானந்த முனிவரின் கிளி அல்லவா!

பிரபுவே! பிரபுவே!!

அய்யா! அய்யா!!

சுகதேவன் உடனே போய் முனிவரை வரவேற்றான்.

சுவாமி! நமஸ்காரம். வாருங்கள்.

சுவாமி! முதலில் இளைப்பாறுங்கள். பிறகு பேசலாம்

ஒரு முக்கியமான வேலைக்காக வந்தேன். நீ தனியாக இருப்பது நல்லதாயிற்று.

சாந்திபுர நிலைமை பற்றி முனிவரும் சுகதேவனும் பேசினார்கள்.

தலை நகரிலிருந்து வரும் செய்திகள் மிகுந்த கவலையை அளிக்கின்றன

மிகவும் துயரமானதே சுவாமி! அரச குடும்பமே தென்படவில்லையாமே!

ஜெயானந்த முனிவர் பதக்கத்தையும் சங்கிலியையும் சுகதேவனிடம் காட்டினார்.

குழந்தையான இளவரசன் என்னிடம் உள்ளான். இந்த சங்கிலியைப் பார்!

பதக்கத்தில் ராஜ முத்திரை உள்ளது. உங்களிடம் உள்ளவன் இளவரசனே. சந்தேகமே இல்லை.

இளவரசனை என் பாதுகாப்பில் விடுங்கள்.

சுவாமி!

வேண்டாம். அவன் இன்னாரெனத் தெரியாமல் வளர வேண்டும். என்னோடு இருப்பதே நல்லது. அவனை எதிரிகள் கண்டு கொள்ளக் கூடாது.

நீ இந்தப் பதக்கத்தையும் சங்கிலியையும் பத்திரமாக வைத்திரு

தங்கள் விருப்படியே பத்திரமாக வைத்திருக் கிறேன். ஆனால்...

அதை இளவரசரிடம் நான் எப்போது ஒப்படைக்கவே வேண்டும்? இது என்னிடம் இருப்பது அவருக்கு எப்படி தெரியும்?

தக்க சமயத்தில் இளவரசனே வந்து உன்னிடமிருந்து இதை வாங்கிக் கொள்வான்.

தொடரும்.

# மின்சார சிக்கனம்

ஒருநாள் வீணாவும் அவள் தாத்தாவும் வீட்டில் லூடோ விளையாடிக் கொண்டிருந்த போது, வீணாவின் அப்பா மிகக் கவலையோடு வீட்டினுள் நுழைந்தார். தன் மகன் கவலையோடு வருவதைப் பார்த்த தாத்தா, ''என்ன விஷயம், ஏன் கவலை யாக இருக்கிறாய். என்னிடம் சொல் என்னால் முடிந்த உதவி யைச் செய்கிறேன்'' என்று கேட்டார்



''அப்பா, இந்த மாதம் மின் கட்டணம் மிகவும் அதிகமாக வந்துள்ளது. இதைவிட சிக்கனமா மின்சாரத்தை எப்படி உபயோகிப்பது என்று தெரிய வில்லை,'' என்றார் அப்பா.

'முடியும்' என்றார் தாத்தா. எல்லோரும் ஹாலில் அமர்ந்திருந்தும், எல்லா அறைகளிலும் மின் விளக்கும், மின்விசிறியும் ஓடிக் கொண்டு இருந்தன. ஒருவரும் பார்க்காமலே, டி.வி ஓடிக்கொண்டிருந்தது. இப்படி யெல்லாம் மின்சாரம் வீணாக செலவழிக்கப்படுவதை அப்பாவுக்கு காண்பித்த பிறகு, ''வீணா, தண்ணீர் குடிக்க ஃப்ரிட்ஜை திறக்கும் நீ, குடித்து முடிக்கும் வரை திறந்தே வைக்கிறாய். இதனால் ஃப்ரிட் ஜின் குளிர்ச்சி குறைந்து போய், ப்ரிட்ஜ் இன்னும் அதிக நேரம் ஓடி மின்சாரம் வீணாகிறது.

இவ்வாறே கீசரை இயக்கி தண்ணீரைச் சுட வைத்து குளித்த பிறகும் நிறுத்து வதேஇல்லை. இப்படி யெல்லாம் செய்வதால் மின்சாரம் யாருக்கும் பயனில்லாமல் வீணாகச் செலவாகிறது.

அந்தக் காலத்தில் நான் சிறுவனாகஇருந்த போது மின்சாரம் இல்லை. நான் சிம்னி விளக்கின் வெளிச்சத்தில் தான் மிகவும் கஷ்டப் பட்டு படித்தேன். ஆகவே மின்விளக்கு, மின்சாரத்தின் அருமை எனக்குத் தெரியும். உங்களுக்கும் மின்சாரத்தின் அருமை தெரிந்திருந்தால் இவ்வாறு வீணாக்க மாட்டீர்கள்'' என்றார் தாத்தா.

தாத்தாவின் அறிவுரையைக் கேட்ட வீணா அதன் படியே மின்சாரத்தை சிக்கனமாக உபயோகிக்க உறுதி கொண்டாள்.

## உங்கள் அறிவியல்



### கண்களின் பாதுகாப்புக் கவசம்

கண்ணை உயர்த்திப் பார்த்தால் நீங்கள் உங்கள் புருவத்தை காணலாம். புருவங்களால் என்ன பயன்? அதைக் கூறினால் உங்களுக்கு வியப்பாக இருக்கும். பு ருவங்கள் இ ல்லா விட்டால் கோடை காலங்களில் நெற்றியிலிருந்து வழிந்து ஓடும் வியர்வை நேராகக் கண்களில் தான் போய் விழும். இதனால் கண்பார்வை கெடுவதோடு உடல் நலனும் பாதிக்கப்படும். ஏ னெனில் ந ம் உடலிலுள்ள அழுக்கு வியர்வையில் கலந்து தான் வெளி வருகிறது. எனவே புருவங்கள், பார்க்க உதவும் கண்களை கவசம் போல இருந்து பாதுகாக் கின்றன.

நன்கு அமைந்த புருவங்கள் கண் களின் அ ழகை எ டுத்துக் க ாட்டு கின்றன. நமது முகத்தில் கண்கள் மிக முக்கியமானவை. அவை முகத்திற்கு அழகை அளிப்பதோடு உணர்ச்சிகளை வெளிப்படுத்தியும் முகத்திற்கு ஜீவகளையையும் கொடுக்கின்றன.

## உங்களது சுற்றுப்புறம்

### பறக்கும் தவளை

ஒரு நதியின் பக்கமுள்ள அசையும் மரக்கிளையின் மெல்லிய நுனியில் ஒற்றைக் காலால் தொங்கிக் கொண்டி ருக்கும் உயிரினத்தை நீங்கள் பார்த் திருக்கிறீர்களா? இப்படிச் செய்யக் கூடிய உயிரினம் மரத் தவளையே.

சிலர் தவளைகளைப் பிடித்துப் பழக்கி சர்க்கஸ்காரரைப் போல வித்தைகள் செய்து காட்டவும் கூட பழக்கி இருக்கிறார்கள். இந்த மாதிரி எல்லாம் செய்ய மனிதர்களை விடத் தவளைகள் செய்யத் திறமை கொண்ட வை. இதற்குக் காரணம் அவற்றின் பாதங்களின் அ மைப்பே. இ ந்த விசித்திர அமைப்பினால் அது எந்த நிலையிலும் எங்கு வேண்டுமா னாலும் ஒட்டிக் கொள்ள முடியும்.

மரத்தவளைகள் 500 வகைகளில் உலகின் எல் லாக் க ண்டங்களிலும் காணக் கிடைக்கின்றன.



# உங்கள் பக்கங்கள்   உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### யாம்...யம்...

யாம் எனப்படும் தாவர வகையை நியூகியானாவில் சேபக் நதிக் கரையில் அபெலாம் என்ற கூட்டத்தினர் நூற்றுக் கணக்கான வகைகளில் வளர்க்கிறார்கள். மிக நல்ல யாமை வளர்த்துக் காட்டும் அபெலாம் மனிதர் மிகவும் பெருமை கொள்கிறார். இதற்காக யாம் திருவிழா என்று ஒன்றை அவர்கள் கொண்டாடுகிறார்கள்.



அச்சமயத்தில் தாம் வளர்த்த யாம்களை அவர்கள் ஒரு கண் காட்சியில் கொண்டு வந்து வைக்கிறார்கள். சாதாரணமாக ஒரு யாம் ஒன்பது அடி நீளத்தில் வளர்ந்திருக்கும். நன்கு வளர்ந்த யாம் பன்னிரெண்டு அடிகளுக்கும் மேல் கூட இருக்கும்.

இந்த யாம்களுக்கு வண்ணங்கள் தீட்டி அ  ழகு ப  டுத்துகிறார்கள். காட்சியில் வைக்கும் யாம்களை அவர்கள் உண்பதில்லை.

## அறிவு வளர...

### இந்தியப் புராணங்கள் பற்றி உங்களுக்கு எவ்வளவு தெரியும்?

1. பாரதப் போரில் நகுலன் யாருடன் போர் புரிந்தான்?





2. இராமாயணத்தில் காகுஸ்தன் என வருவது யாரைக் குறிக்கிறது?

3. மகாபாரத்தில் வரும் ஒரு மாவீரனுக்கு சவ்யசாசி என்ற பெயரும் உண்டு. யாவரும் அறிந்த அவனது பெயர் என்ன?





4. சாயா யாருடைய இணைபிரியா மனைவி?

5. ராம ராவண யுத்தத்தில் ராவணனின் மகன் தேவாந்தகன் அவனை வென்றவர் யார்?



(விடைகள் 78ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



SOURAA



SIVARKKAMANI

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு மே 2004 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

**ஜனவரி 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**சி. வேதநாயகம்**

த/பெ பி.சி.கணேசன்
யாதவர் தெரு,
தளவாய்புரம், பணக்குடி - 627109.

**பரிசு பெற்றவை**





சுமையான வாழ்க்கை
சுகமான வாழ்க்கை

'புராணங்கள் பற்றித் தெரியுமா?' விடைகள் (பக்கம் 77)

1. சகுனி.
2. இராமரின் முன்னோர்களில் ஒருவர்.
3. அர்ஜுனன்.
4. சூரியன்.
5. அனுமார்.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)